# 'பதிவுகள்' 101 கவிதைகள்

## (தொகுதி மூன்று)

*"அனைவருடனும் அறிவினைப் பகிர்ந்து கொள்வோம்"*



*"அனைவருடனும் அறிவினைப் பகிர்ந்து கொள்வோம்" என்பதைத்தாரக மந்திரத்துடன், எழுத்தாளர் வ.ந.கிரிதரனை ஆசிரியராகக்கொண்டு மார்ச் 2000 ஆம் ஆண்டிலிருந்து வெளியாகும் இணைய இதழ் 'பதிவுகள்' (பதிவுகள்.காம்). 'பதிவுகள்' இணைய இதழில் வெளியான கட்டுரைகள், சிறுகதைகள், கவிதைகள் மற்றும் ஆய்வுக் கட்டுரைகள் மின்னூற் தொகுப்புகளாக வெளியாகும். இது அவ்வகையில் வெளியாகும் மூன்றாவது கவிதைத்தொகுப்பு.*



**'பதிவுகள்.காம்' வெளியீடு!**

**அக்டோபர் 2020**

# உள்ளே..

## 1. பயணம் - பிரதீபா,புதுச்சேரி -

வெண்ணிலவு வீடு திரும்ப
கதிரவன் கண்விழிக்கும்
சாயல் படர
விடிந்தும் விடியாமலும்
இருந்த அந்த
காலைப் பொழுதில்
முத்துமுத்தாய்ப் படர்ந்த
பனித்துளிகளில் நனைந்த
வயல்வெளிகளும் ,
விறைத்து நிற்கும்
காவலர்களைப்போல்
இருபுறமும் அணிவகுத்து
நிற்கும் மரங்களும் ,
மீனவன் வலையில்
அகப்படாது பிழைக்க
இங்கும் அங்கும் நீந்தும்
உயிர் போராட்டத்தை
தன்னுள் மறைத்து
அமைதியையே ஒலமிடும்
நீரோடைகளும் ,
கதிரவனின் பார்வை பட்டு
மொட்டவிழ காத்து நிற்கும்
தாமரைகள் நிறைந்த
தடாகங்களும் ,
குஞ்சுகளை கூட்டில் விட்டு
நீர்நிலைகளை நாடி
கூட்டங்கூட்டமாய் பறக்கும்
பறவைகளும் ,
மெகங்களுடன் ரகசியம் பேசும்
உயர்ந்த மலைகளுமாக
மெல்லியதாய் ஒளிபடர்ந்து
சிலுசிலிர்த்து வீசும் காற்றை
சீறி ஊடுருவும் ரயிலின்
இதமான தாலாட்டில்
பயணித்தேன் ரம்மியமான
அந்த காலைப்பொழுதில்
ஒன்றன்பின் ஒன்றாக
இக்காட்சிகளை ரசித்தபடியே

*- பதிவுகள், செப்டம்பர் 2009 இதழ் 117 -*

## 2. உன் நினைவுகள் - பிரதீபா,புதுச்சேரி -

கதிரவன் கண்விழித்த
விடியற்காலை தொட்டு,
தன் ஒளியை
சந்திரனுக்குத் தாரைவார்த்த
மாலை வரை
என் உள்ளமெல்லாம்
உன் நினைவே,
என் கண்கள் காணுகின்ற
காட்சிகளில் எல்லாம் நீயே..
என் செவிகள் கேட்பது
என்னுள் இருந்து
நீ உரைக்கும் வார்த்தைகளே..
இவ்வாறே
நான் உறங்கினாலும்
உறங்க மறுக்கிறது
உன் நினைவுகள்
என் சுவாசத்தைப்போல...

bradipagen@yahoo.com
பதிவுகள், செப்டம்பர் 2009 இதழ் 117

## 3. நஞ்சுக் கொடியாகியதோ தொப்புள் கொடி .....? - மட்டுவில் ஞானக்குமாரன் _

ஏதேன்சு நகரத்து
தீ வந்து
வயிற்றுள்ளே ஒப்பாரி வைக்கிறது.

நைல் நதியோடு
போட்டி போடுகிறது
கண்ணீர் ஆறு.

நொருங்கி
விழுந்த இதயத்துண்டுகள்
சிதறி
கவிதைகளாகிக்
கிடக்கிறது.

இந்த இடத்திலும்
கவிதையா என நீ கேட்கலாம்.
வேறென்ன செய்ய
பீரங்கிகளுக்கு முன்னே நின்று
கல்லெறியும்
பலஸ்தீனச் சிறுவன் நிலை

தொப்புள் கொடி
கூட
நஞ்சுக்கொடியாகிப் போயிற்று ....

மைக்கல் ஐக்சக்சனுக்;;காக
கொட்டிய
ரகுமான் விழிகள்
எமக்காக
ஒரு துளி சொட்டவில்லை

விஞ்ஞானத்தமிழ் மகன்
கலாமுக்கோ
ஒரு வார்த்தை செலவிட
நேரமில்லை.

கதை தேடும்;;;
இயக்குனர்கள் கூட
எங்கள் கண்ணீர்க் கதையினை

கடன் கேட்;கிறார்கள்.

தமிழகத்து
அரசியல்வாதிகளோ
பேசும்பொருளுக்காக
எங்கள் பிணங்களை தோண்டி
எடுக்கிறார்கள்.

மூத்திரத்தைக்;
கயிறென எண்ணியதன்
விளைவு .

ஒளிந்திருந்து கல்லெறியும்
தரகர்களால்
கூடிழந்து போயின
குருவிகள்.

சிறு துரும்பையேனும் பிடித்து
கரை சேர முயலும்
எறும்பின் நிலை
எமது .....!

maduvilan@hotmail.com
பதிவுகள், செப்டம்பர் 2009 இதழ் 117

## 4. ஏன் மறுக்கிறான்? - கவி -

வேட்டையாடி,
விலங்கு வளர்த்து,
வேளாண்மை செய்தார் - அப்போது
அவர்களுக்கு ஊரும் இல்லை - அங்கு
கோயிலும் இல்லை

இனங்கள் பெருகின
போட்டிகள் தோன்றின
தன்னை விஞ்சிய
அனைத்தையும் வணங்கினர்
விதிமுறை வகுத்தனர்
எல்லைகள் குறித்தனர்

தேவைக்கேற்பவே
கண்டுபிடிப்புத் தொடர்ந்தது
சாதிகள் வளர்ந்தன
சமயங்கள் பெருகின

சமூக ஒழுங்கிற்காய்
சாத்திர விதிகள்
சாத்வீக வாழ்வுக்காய்
சத்திய போதனைகள்

மறந்தான் மனிதன்
மானுடத்தை
மனிதத்தை
ஆன்மாவின் நேயத்தை

இழந்தான் வாழ்வின்
இன்பத்தை
அமைதியை - தன்
இருப்பைக்கூட

வலியவன் கூறுவதே
வேதம் ஆனது
எளியவர் என்றுமே
அடிமைகள் ஆயினர்

கடவுளைப் படைத்தான் - ஆனால்

கருணையை மறந்தான்
தானங்கள் கொடுத்தான் - ஆனால்
ஏழையை மறந்தான்

சாத்திரம் சடங்கை
மாற்றினான் தன் வசதிக்காக
மாற்ற மறுக்கிறான் - சில
மூட நம்பிக்கைகளை மட்டும்

nkaviyan@gmail.com
பதிவுகள், செப்டம்பர் 2009 இதழ் 117
******************************

**5. நாளைய உலகம் - கனிஷ்கா தென்காசி -**

காசுகொடுத்து மூச்சுக் காற்றுவாங்கி
ஒற்றை மாத்திரையில் வயிற்றை நிரப்பும்
நாளைய மனிதன் கேட்பானோ!
இப்படியும் .......

'நெல் மரமோ! தென்னங் கொடியோ!
மாஞ்செடியோ! மாதுளை விருட்சமோ!'

பதிலளிக்க அப்பாரினில்தான் ஆளுண்டோ!

பாதி ராத்திரி கனவில் வந்தாள் பண்டைக்காலப்
பாட்டி ஒருத்தி

முன்னொரு காலத்தில்........

விளைநிலம் என்றொரு இடமுண்டு
விவசாயம் என்றொரு தொழிலுண்டு
விவசாயி என்றொரு இனமுண்டு
விளைதானியம் என்றொரு பொருளுண்டு

வித்தைப் போட்டு விளைவித்தான்
நெத்தைப் போட்டு மரம்வளர்த்தான்
மண்ணில் வியர்வை சிந்தவிட்டான்
மனிதன் வாழ உணவளித்தான்

சேற்றில் மிதித்த தொழிலாளி
உழைப்பில் அவனே முதலாளி
உலகின் முதலாம் தொழிலதனை
செய்தவன் அவன்தான் விவசாயி

ஏட்டுக் கல்வி வந்தபின்னே
ஏர்பிடிக்க இயலவில்லை
இயந்திரவாழ்க்கை ஆனபின்னே
பயிர்த்தொழில் செய்ய யாருமில்லை

நாட்டு வாழ்க்கை போகியாகி
நகர வாழ்க்கை போதையாச்சு
நாகரீக மோகம் கொண்டு
நல்லொழுக்கம் போயாச்சு

பகட்டுவாழ்க்கை மாயையிலே
பறிகொடுத்த நிலமெல்லாம்
பல்லடுக்கு மாடிகளாய்ப்
பல்லிளித்து நிற்குதிங்கே

உணவென்ற பொருளில்லை
உறவென்ற பேரில்லை
இப்படியோர் மனித வாழ்வு
எப்பிறப்பிலும் வேண்டாமே!

kalpa2011@gmail.com
பதிவுகள், ஆகஸ்ட் 2008 இதழ் 104

**6. சுதந்திரம் ? - றஞ்சினி -**

இருண்டு கிடக்கும்
குகைக்குள்
குருதியும்
ஓலமும்..

இறந்து கிடக்கும்
உடல்களுக்கும்
உரிமைகூற
எவரும் இல்லை

வீதிகளிலும் வீடுகளிலும்
மரங்களை அழித்து
மனங்களை அழித்து
நடப்பட்டுள்ளார்கள்
மனிதர்கள்
ஆயுதங்களுடன்..

திறந்தவெளிச் சிறைகளுக்குள்
பயத்தின் நிழல்
மனிதர்களைத்தின்ன
காணாமல்போபவர்களை
யார் தேடுவது

போருடன் தூங்கி
போரில் விழித்து
போரை சுவாசித்து
இறந்த உடல்களில்
தடுக்கிவிழுந்து
சாதாரண வாழ்வே
மறந்து
புதைகுழிக்கலாச்சாரத்தில்
மிதக்கும் எமது
தேசத்தில்..

சுதந்திரம் என்றோ
தற்கொலை செய்துவிட்டது

shanranjini@yahoo.com
பதிவுகள், ஆகஸ்ட் 2008 இதழ் 104

### 7. நகைப்பாக்கள்- சென்ரியு - மாமதயானை -

குடை ராட்டினம்
சுற்றும் சிறுவனுக்கு........
உலகத்தைச் சுற்றும் மனசு

தேர்வு பயம்
இரவு முழுக்க படித்தான்.......
கந்த சஷ்டி கவசம்

அம்மாவின் கடுதாசி
பாதியில் படிக்கிறது.......
என்னோடு கண்ணீரும்

சிரிக்க வைக்கும் கோமளியை
அழவைக்கும்;;;;;........
வாழ்க்கை

வாசனை திரவியத்தை
மறக்கவில்லை..........
குளிக்க மறந்தவன்

ஊர் சுற்றும் பிள்ளையின்
வேலைக்காக..........
கோயில் சுற்றும் அம்மா!

பதிவுகள், ஆகஸ்ட் 2008 இதழ் 104

### 8. அமைதியின் அரசிக்காக...... மாமதயானை -

அடிக்கடி
செல்லமாய்
நீ என்
தலையில் கொட்டுவதை
நினைவு படுத்தியது.......
சற்று முன்
பெய்த
ஆலங்கட்டி மழை.

நாளுக்கு நாள்
உன்னுடைய
சகதோழிகளுக்கெல்லாம்
வயது கூடிக்கொண்டே போகிறது
ஆனால்
உனக்கு மட்டும்தான்
அழகு கூடிக்கொண்டேபோகிறது.

உனக்கு பின்னால் ஒளிவட்டம்
எதுவும் தோன்றவில்லை
கையில் ஆயுதங்களும்
எதுவும் இல்லை
ஆபரணங்களின் ஆதிக்கமும்
உன் திருமேனியில் இல்லை
எனினும்
நீ
என் காதலின் கடவுள்

நிறைய பேசுவேன்..........
உன்
அருகில் மட்டும்
ஊமையாகிப்போகும்
நான்.

மறுபடியும்
எங்களுர்
விழாக்கால
இரவுகளை நினைவுபடுத்துகிறது
உன் புன்னகை.

என்
அருகிலேயே
நீ இருக்கிறாய்..........
ஏழு கடலையும்
ஏழு மலையையும்
தாண்டி
சொர்க்கம் இருப்பதாய்
தவறாய் கதை சொன்ன
தமிழ் ஐயாவை
என்ன செய்வது.

manisen37@yahoo.com
பதிவுகள், ஆகஸ்ட் 2008 இதழ் 104

## 9. சொத்துப் பங்கீடு!! -இமாம்.கவுஸ் மொய்தீன் -

தந்தையின் சொத்து
மக்கட் கென்பர்!

அவரின் மறைவுக்குப் பின்
நிகழ்ந்தது சொத்துப் பங்கீடு!

மூத்தவருக்குச் சென்றன
வீடும் கடையும்!

அடுத்தவரின் பங்கில்
நஞ்சை புஞ்சைகள்!

மற்றவருக்குச் சென்றன
நகைகளும் மனையும்!

சகோதரிகளின் பங்கில்
கால்நடைகள்!

கடைசி மகனாய்
நான் இருந்ததால்....

என் பங்கில் வந்தன
கடனும் அம்மாவும்!!

drimamgm2001@yahoo.co.in
பதிவுகள், ஆகஸ்ட் 2008 இதழ் 104

## 10. சுதந்திரமே உன்னால்! -இமாம்.கவுஸ் மொய்தீன்.

சுதந்திரம் அடைந்து
அறுபதாண்டு காலத்தில்
இன்றைய நிலையில்
நம் நாடு...
உலக அரங்கையே
வியக்கத்தான் வைக்கிறது!

உற்பத்தியில் தன்னிறைவு
விவசாயத்தில் பசுமைப்புரட்சி

கல்வி அறிவியல் மருத்துவம்
தகவல் தொழில் நுட்பம்
பொறியியல் மற்றும்
இதர துறைகளில்
அபார வளர்ச்சி!

சொந்தமாய் விண்கோள்கள்
ஏவுகணைகள் அணுவாயுதங்கள்
இயந்திரங்கள் வாகனஉற்பத்தி யென
வேகமான முன்னேற்றம்.
எல்லாமே இமயத்தைக்
காட்டிலும் உயர்வுதான்
பெருமைதான்!

ஆயினும்...
செங்கோட்டையில்
தேசியக் கொடியை ஏற்றிவிட்டு
குண்டுகள் துளைக்காத
கண்ணாடிப் பேழையின்
உள்ளிருந்து
பிரதமரின் உரை...

விமான இருப்புப்பாதை
பேருந்து நிலையங்களிலும்
வழிப்பாட்டுத் தலங்களிலும்
பொதுவிடங்களிலும்
பாதுகாப்புச் சோதனையின்
பெயரில் பொதுமக்கள்
வதைக்கப்படும் நிலை....

பிரித்தாண்டவர்கள்
வெளியேறிவிட்ட பின்னரும்
அவர்கள் விட்டுச் சென்ற
பிரிவினை இனவாத
நச்சுவிதைகளின் தாக்கத்தால்
நிகழும் தீவிரவாத அச்சுறுத்தல்கள்
அழிவுகள் இழப்புகள்....

அன்னிய மாநிலத்தவர்
வெளியேற வேண்டும்
அன்றேல் உதைக்கப்படுவர்
வதைக்கப் படுவர் ஒழிக்கப்படுவரென
செயல்படும்
சில இயக்கங்களின்
அச்சுறுத்தல்கள்....

ஆணையங்களும் உச்சநீதிமன்றமும்
ஆணைகள் பிரப்பித்த பின்னரும்
அண்டை மாநிலங்கட்கு
நதிநீரைப் பகிர்ந்தளிக்க மறுத்து
தேசிய ஒருமைப்பாட்டுக்கு
ஊறுவிளைவிக்கும்
மாநிலங்களின் மனப்போக்கு...

அன்றாட நடைமுறையாகிவிட்ட
கொலை கொள்ளை இலஞ்சம்
ஊழல்கள் சமூகவிரோதச் செயல்கள்...
சகோதரனே பகையாய் இருக்கையில்...
சுதந்திரமே உன்னால்
சுவையுமில்லை!
மகிழ்வுமில்லை!!

drimamgm@hotmail.com
பதிவுகள், செப்டம்பர் 2008 இதழ் 105

## 11. இல்லாமையின் இருப்பு மெலிஞ்சிமுத்தன்- நடராஜா முரளிதரன்

என் சூழ்விளக்கின் மீது
இருளைக் கொழுத்தி வைத்துவிட்டு
வெளிச்சம் பற்றிய எனது வியாக்கியானத்தை
நீ என்னென்று மறுக்கின்றாய்?

விளக்கின் தேவை குறித்தே
உனக்குள் எத்தனை சஞ்சலங்கள்
எனவே அதன் இருப்பையே மறுதலிப்பதால்தான்
உலகின் இருப்பையே
அர்த்தப்படுத்திக் கொள்ளலாம்
என்றே நான் எண்ணுகின்றேன்

என் இருத்தலுக்கும் இல்லாமைக்கும்
இடையில்
விரிந்து கிடக்கும் ஒரு பெருவெளியை
எதைக்கொண்டு நிரப்புவேன்
என் எழுத்தைத் தவிர
என் எழுத்து எழுந்து
உன்வாசல் வரை வரவில்லையா?

யுகம் யுகமாய்
வருவதும் போவதுமாய்
எழுந்தவைகளை
எண்ணிப் பார்த்துக்கொள்
நிலைத்தவைகளைவிட நிலையாமைகளே
வரலாற்றுப் பெருவெளியை
நிறைத்துக் கொண்டிருப்பதை
உணராயோ நீ ?

இல்லாமையின் பெருவெளியில்
தற்செயலாய் விழுந்த
சிறு துளிதான் நான்
என் இருத்தலுக்கான
பிரயத்தனங்கள் எல்லாம்
குமிழிகுமிழியாய் உடைந்து
இல்லாமையை நிரப்புகையில்
நான் என்ன செய்யலாம்
என நினைக்கின்றாய்

குமிழிகளின்
தற்காலிக இருத்தலின்பின்
வெடிப்புக்களும் உடைப்புக்களும்
நிகழ்ந்து கொண்டுதான்
இருக்கின்றன
எனவே
இல்லாமை என்ற பெருவெளியில்
வந்து குவிந்த நீயும்
இன்னோர் இல்லாi மாதான்

nmuralitharan@hotmail.com
செப்டம்பர் 2008 இதழ் 105

## 12. ஆருக்கையா அக்கறை - த.சிவபாலு -

சிந்துவெளி சீர்பெருக்கி கங்கைநதி நீராடி
வந்தவழி பேரோச்சி வளங்கொண்ட வனிதை
முந்துதமிழ் பாவையெனும் மொழியாள்
செந்தமிழாள் தேன்மொழியாள் பாதம்பணிந்தேன்.

அகத்தியனின் அடிதொட்டு தொல்காப்பி தோள்தொட்டு
அதங்கோட்டான் அழகோடு விளையாடி அருமருந்தாய்
பதமாகக் குறளினிலே திருப்பெற்று பாரில்மேவி
இதமாக இருப்பவள்மேல் ஆருக்கையா அக்கறை?

மூவேந்தர் குடைபிடிக்க முன்னாகத் தானிருந்து
வீராப்பு நடைகொண்ட தமிழ்நங்கை தரணியிலே
ஆராஅமு தெனப்பருக ஆக்கிவைத்த தமிழ்த்தேனை
சீராகப் பருகியின்பம் பெறவிங்கு யாருக்கையா அக்கறை?

சங்கம் வளர்த்த தமிழ் சங்கநாதம் கொண்டதமிழ்
வங்கம் கடந்த தமிழ் வடகரையும் வந்ததமிழ்
பங்கம் இலாப் பழந்தமிழின் பண்பாடு பயின்றுவர
இங்கும் இருப்போரில் யாருக்கையா அக்கறை?

பொருள்தேடி புதுவீடுவாங்கி ஏட்டிக்குப் போட்டியாய்
மருளோடு மாய்ந்துழன்று வேலைசெய்து மயக்குற்று
இருளோடு இருப்போர்க்கு இறைமீது நினைவோட்ட
அருளோடு அலைமோத யாருக்கையா அக்கறை?

ஆசைப்பெருக் கோடுஅண்ணன் அகத்தினிலும் அடிபெரிதாய்
ஆசைமனையாள் மனமொத்து அதில்பெரிய வீடுவாங்கி
மேசைவிரிப்போடு விலாசம்பெரிதாக்க நினைப்போர்க்கு
ஆசைஅறுத்து இன்பம் துய்ப்பதற்கு யாருக்கையா அக்கறை?

பெண்மைக்கு அணிகலானாம் ஐம்பெருங் காப்பியங்கள்
உண்மைக்கு உயர்வாக இம்மைக்கும் பொருளுரைக்கும்
திண்மைக்கும் திணவெடுக்கும் அகம்புறம் நூறுகளும்
அண்மித்துப் பருகிவிட யாருக்கையா அக்கறை?

மூவர்முத லிகளை முற்றோதல் செய்வதற்கும்
சீவன் முத்திபெறும் சீர்பெறு திருமூலர் மந்திரமும்
திருப்பொலி திருவாசகத் தேன்சுவையும் பருகி
கருப்பொருளை உணர்ந்துவிட யாருக்கையா அக்கறை?

தமிழ்ச் சுவைத்தேனமுதம் தந்துநின்ற கம்பனையும்
இளமைத் தமிழ்தந்த இளங்கோவடி களையும்
அமிழ்தம் பொழிகின்ற ஐங்குறு நூற்றோடு
பழந்தமிழ்ப்பதிற் றுப்பத்திலும் யாருக்கையா அக்கறை?

மண்ணுக்கும் பெண்ணுக்கும் மனமழிந்து கன்னியரின்
கண்வீச்சுக் கிடைக்கக் காத்திருக்கும் காலத்தில்
மண்மீட்புக்கும் மனைமாட்சிக்கும் உறவுகளின் ஓலங்களுக்கும்;
எண்ணிக் கருத்தூன்ற யாருக்கையா அக்கறை?

அன்பு அறம்கூறும் அருந்தமிழ் மணிமேகலையும்
துன்பச் சுமைகூறும் குண்டல கேசியையும்
முற்பிறப்புக் கதைகூறும் சீவகசிந் தாமணியையும்
கற்பனைச் சுவைமிகு சங்கத்தமிழ்கற்க யாருக்கையா அக்கறை?

எண்ணில் அடங்காத எழு தவியலாத துன்பமெம்
மண்ணில் மாதாண்டவம் ஆடுதையா எம்மினமோ
கண்ணில் நீரோடு கால்போன போக்கினிலே
உண்ண வழியின்றி வாடுவதில் யாருக்கையா அக்கறை?

தனியொருவர்க் குணவில்லை எனில்ஜகத்தினை அழித்திடவே
தனிமனிதம் பாடிநின்றான் தன்னிகரில்லாப் பாரதியோ
மனிதவினம் பருகநீரின்றி பசிக்குணவின்றி மாழுவது
மனிதப்பெருச் சாளிகளில் யாருக்கையா அக்கறை?

கம்பனைத் தமிழ்ச்சுவை தந்தநாவேந் தனையின்று
நிந்தனை செய்கின்றார் தமிழ்த்தேன் பருகிடாதார்
சிந்தை சிதைந்து சீறுகிறார் கருணாவாம் கம்பனை
விந்தைமிக தமிழைக் கற்றிடஅக் கறையின்றி!

பாரதிபுகழ் பாடிடும் பாவலர் நாவினில்
சாரதியாய்க் கொள்கின்றார் தடையின்றி என்றும்
நேரடியாய்க் கொண்டவன் வடசொல் உவப்பில்
யாரின்று வீசிஎறியத் துணிவார் பாரதிபாவை?

இந்துக் கடவுளர் பெயர்களை அழித்திட
வந்து துணிபவரின்று மறுமதப் பெயர்களை
ஏந்திப் போற்றியே நிற்பவர் நெஞ்சுரமற்ற
வஞ்சனைப் பேய்களா பிசாசுகளா சொல்வீர்!

ஆங்கிலம் தமிழில் கலந்திடல் கண்டும்

தமிங்கிலம் பேசிடும் தமிழர் நன்றே
ஆரியம் அழித்தது அன்னைத் தமிழென
காரியம் கெடுப்பதைத் தடுக்கயாருக் கையாஅக்கறை!

பண்பொடு பல்கலை வளர்த்திடக் கூவிமனம்
புண்பட பாலகர்க்கு சினிமா ஆட்டமே
வண்ணக் கோலமாய்த் தந்திடும் சீரழிவை
எண்ணிப் பார்க்கவே யாருக்கையா அக்கறை?

நாடலும் உளமும் தம்வசமிலராய் நெறிபிழைத்து
கூடலும் குடித்தலும் சுவைத்தலும் தலையாய்த்
தேடலும் நைற்கிளப்பில் கட்டிப்பிடித்தலிலும்; அக்கறை
காட்டலை விடுத்து இறையின்பம் கொள்ள
யாருக்கையா அக்கறை?

“விதியே விதியே தமிழ்ச்சாதியை
என் செயநினைத்தாய் எனக்குரையாயோ?
வாழ்ந்திடும் பொருளொடு வகுத்திடுவாயோ?
சிதைவுற்றழியும் பொருள்களில் சேர்ப்பையோ?
ஆழியாக் கடலோ? அணிமலர்த்தடமோ? இவரென்ன
வானுறு மீனோ? மாளிகை விளக்கோ?
கற்பக தருவோ? காட்டிடை மரமோ?
எனக் குரையாயோ” எனஏங்கினன்
மகா கவிபாரதி தமிழ்ச் சாதியை நினைந்து.
தமிழ் நிலைத்திட வேண்டில்
தமிழர்க்கு அக்கறை வேண்டுமே அதன்மேல்
தமிழ் தெரியாது என் பிள்ளைக்கு
என்பதில் பெருமை சாற்றிடும் போலிகள்
எம்முள் இருக்கிறார் ஐயா?
தமிழ் நிலைக்குமா? என்று ஐநா
கோடிட வைத்த பெருமை
தமிழ்ச் சாதிக்கன்றி வேறுயாருக் குண்டு?
தமிழ் பேசமனமிலாச் சாதியே!
டமிழ் பேசும் தமிழர்களே!
மொழிக்காகப் போராடுவோம் என்று
பொய்மொழி உரைப்பது நலமோ?
கனடிய மண்ணில் தமிழ் கற்க
இலவசமாகத் தந்தது அரசு
மாணவர் தொகையோ நூற்றுக் கொன்று
அறிவீரோ நீவிர் இந்த உண்மை?
மரணிக்காது தம்புமா தமிழ் என்று

கேட்பது புதுமையா சொல்வீர்?
மரணப் படுக்கையில் தமிழ்அன்னை
இன்று வீழ்ந்திடக் காரணம் யாரோ?
தமிழின் பெருமை பேசும் தமிழா
தமிழில் அக்கறை கொள்வாயா?
தமிழை வீட்டிலும் றோட்டிலும் பேசிடவேண்டும்
தமிழ் பாலகராக வளர்த்திட வேண்டும்;
மழலைகள் தமிழ் பேசக் கற்றிடவேண்டும்
செந்தமிழும் நாப்பழக்கமாக வந்திட வேண்டும்;
பைந்தமிழ் மீது அக்கறை கொள்ளவே வேண்டும்
எம்தமிழ் மீது காதலே கொள்ளுதல் வேண்டும்
வேற்றவர் போற்ற தாய்மொழி பேசிடவேண்டும்
வையகம் போற்றும் தமிழர்களாக வாழ்ந்திடவேண்டும்
அதுவே எம்மவர் மூச்சாய் அமைந்திடல் வேண்டும்
இதனால்
தமிழன்னை உவகையில் பூரித்திட வேண்டும்
தரணிபோற்றும் பண்பாடு மிளிர்ந்திடவேண்டும்
எனவே தமிழை
மரணிக்க விடாது காப்பது உன்கடன்
பரணி பாடவைக்காது உறுதியே கொள்ளு
சீரணி நங்கைசிரித்திட வைப்பது உன்கடன்
சிரத்தையே கொண்டு சீரடி போற்றி
தாரணி நங்கையாத் தமிழ் மகள்
வளர வழிகளே சமைப்பாய்
உறுதியே கொள்வாய் ஊக்கமும்
உறவும் உன்னதமாய்க் கொண்டு
சத்தியம் செய்வாய்
சித்தியே பெற்றுச் சிறந்திட
அக்கறை கொள்வாய்
அருந்திறல் தமிழா?
இதுவே என் பணிவான வேண்டுகோள்
அதுவே தாரக மந்திரமாக வேண்டும்
அவையோரே அன்புக்கு நன்;றி
அடிபணிந்தேன் விடைநான் கொண்டேன்
என் கொடுந்தமிழ் செவிசாய்த்த
என் தமிழ் நெஞ்சங்களே
நன்றி கூறி விடை கொள்வேன்
விடைகொடுப்பீரே!

thangarsivapal@yahoo.ca
செப்டம்பர் 2008 இதழ் 105

## 13. துரத்தும் நிழல்களின் யுகம் - சித்தாந்தன் -

எது எனது நிழல்
எது உனது நிழல்

நிழல்களின் கருமையாய் படர்ந்திருக்கும்
எல்லையற்ற மவுனத்தின் மீது
புழுதியாய் எழும் வார்த்தைகளின் நெடியை
துரத்திவரும் மிருகத்தின் நிழல்
எம் நிழல்களுக்கிடையில்

நானொரு பறவையை வரைந்தேன்
அது போராயுதமாயிற்று
அதன் நிழல் என் உறக்கங்களிலிருந்து
என்னைத் துரத்துகிறது

நிழல்களின் மவுனம் கொடியது
துர்க்கணங்களாய் நீளும் அனாதரத்தருணங்களில்
சலனமெழுப்பி நுழைந்து பின் இருளாய் உறைகையில்
நிழல்களின் மவுனம் கொடியது

நிழல்கள் துரத்தும் நகரங்களிலிருந்தும்
வனங்களிலிருந்தும் வரும் மனிதர்களின் பின்னால்
ஆயிரம் நிழல்கள் தொடர்கின்றன

நிழல்
நிழல்
பறவைகளின் குரலின் நிழல்
குழந்தைகளின் சிரிப்பின் நிழல்
காலமாகிய மனிதனின் கடைசிச் சொல்லின் நிழல்
எல்லாமே அச்சமூட்டுவன

நிழல்களால் நிறைந்த இவ்யுகத்தில்
ஒரு பூவையோ
பறவையையோ வரைந்திட முடிவதில்லை

நிழல்களின் நிரந்திரத்தின் மேல் அதிர்கின்ற குரல்
நிழல்களை எழுப்பி பெருநிழலாய் வளர்கிறது

மிகவும் கொடியது
உறக்கத்தின் நடுநிசியில் கனவுகளை

உதறியெழ வைக்கும் சப்பாத்துகளின் நிழல்கள்

நிழல்களுக்கிடையில்தான்
நீயும் நானுமாகத் தூங்குகிறோம் நிழல்களோடு

siththanthan@gmail.com
செப்டம்பர் 2008 இதழ் 105

## மீள்பிரசுரம்: கவீந்திரனின் (அறிஞர் அ.ந.கந்தசாமியின் ) கவிதைகள் (14 -16)

14. ரவீந்திரர்! - அ.ந.கந்தசாமி -

இந்து தேசந் தனில் கவிஎனும்
முந்து வரகவி காளி தாசனின்
இந்த நாளின் அவதார மோவென
வந்தனன் ரவீந்திர நாத தாகுரே.

வெள்ளி வெண்சிகை வெண்ணிறத் தாடியும்
கள்ளமிற் கருணை காலும் கண்களும்
விள்ளுதற் கரிய கவிதை வேகம்
துள்ளிடும் உள்ளமும் கொண்டனன் தாகுரே.

வங்க நாடு வழங்கிய வண்கவி
எங்கணும் புகழெய்திட ஏதமில்
துங்கமார் கீதாஞ்சலியாம் துய்ய நூல
மங்கிடா தொளிர்தர யாத்தளித் தனனே.

கவிதை யாகுக காதை யாகுக
விவித நாடக நூலு மாகுக
புவியி லெவரும் புகழுமா றிவன்
கவிஞர் மன்னவன் செய்தளித் தனனே.

பாரத தத்தின் இன்னிசை பயின்றிடும்
வீர தேசிய கீதமும் தந்தனன்
யாரு மெச்சிடும் சாந்தி நிகேதனப்
பேரு டைக்கலைக் கோவிலும் கண்டனன்.

முந்தைநாள் முனி போலொரு தோற்றமும்
நந்தமிழ் கவி நாட்டமும் தனது
சொந்த நாட்டினில் சோர்விலா அன்பும்கை
வந்தவன் இவன்போல் வேறு யார்ஆரோ.

திறமுடைக் கவி எனில் அத்திறம்
பிறந்த நாடு பேசிடில் போதுமோ
பிறபுலத்தும் பேரெய்தி வாழ்ந்தவோர்
குறைவிலாக் கவி மன்னவனாரோ

பலபு லத்துக் கவித்திற னாய்ந்தோர்
உலக நோபல் பரிசைத் தருவோர்

கலைகள் வல்ல கவிஎனக் கொண்டு
தலையதாமப் பரிசையும் தந்தார்.

காளி தாசக் கவியர சோச்சினால்
ஊழி தோறும் தன்புகல் நாட்டிட
வாழி ரவீந்திரன் நாமமும் வையகம்
வாழும் நாள்வரை வாழிய வாழியவே!

- ஸ்ரீலங்கா ; பெப்ருவரி 1961.-

**15. கனல்! அ.ந.கந்தசாமி -**

சண்ட மாருதம் எழுந்ததடா - இந்தச்
சகமெலாம் சூறையில் சுழன்றதடா
அண்டங்கள் யாவுமே நடுங்குதடா - மேலே
ஆகாய மேகமும் அலைந்ததடா.

எங்கும் கனல்தோன்றி மூடியதே - காணும்
எட்டுத்திசையும் எரியுதடா,
பொங்கும் நெருப்பெங்கும் பாய்ந்ததடா - யாவும்
பொசுங்கிப் பொசுங்கியே மாயுதடா!

எங்கிருந்தோ இதெழுந்ததடா - என்று
ஏங்கிநானும் எங்கணும் பார்த்துச் சென்றேன்
அங்கொரு பாட்டாளி மூச்சுவிட்டான் - பெரு
மூச்சினில் தோன்றிய சூறையடா!

தீயிது எங்கிருந் தோங்குதடா - என்று
திக்குகள் எங்குமே பார்த்துச் சென்றேன்
பேயிது என்றான் பாட்டாளி ஓர்மகன்
பெருநகை செய்திடக் கண்டேனடா.

- ஈழகேசரி - 7.11.1943. -

### 16. நாட்டுப் பற்று! அ.ந.கந்தசாமி -

யான்பிறந்த பொன்னாடு என்று வாழ்வினி லெண்ணாத
மானமற்ற நடைப்பிணம் மானிலத்தில் உண்டுகொல்?
எனதுநாடு எனது தேசம் எனதுமொழியென் றெண்ணிலா
'மனசு' அற்ற மானமற்ற மனிதன் என்ன மனிதனோ.

வாயகன்று ஊரெல்லாநம் வருத்தமோ டலைந்துதன்
தாயகத்து மண்ணிலே காலெடுத்து வைக்கையில்
நேயமூறி நெஞ்சினில் நிறைய இன்பவெறிகொளா
பாவி மகனாம் உள்ளனோ பாருமையா நும்மிடை.

நாடிநாளப் பாய்ச்சலில் நாட்டுவளர்ச்சி அற்றவன்
கோடிச்செல்வன் ஆகிலென்? குறைவில் பட்டம் சூட்டிலென்?
ஓடிப்பதவி உயரிலென்? உவந்துஇதய ஊற்றினால்
பாடியவனை இசைப்பவர் பாரில் யாரும் இல்லையே.

சுரணையற்ற சுயநலப் பேடிதன் மதிப்பிழந்து
இரணை மரண மெய்துவான் இருகிலத்தும் மக்கள்தம்
அரியநிணைவு தன்னிலும் அவனுக்காக அழுபவர்
அருமைபாடி ஏத்துவார் ஆருமில்லை இல்லையே.

- ஸ்ரீலங்கா அக்டோபர் 1955 -
செப்டம்பர் 2008 இதழ் 105

## 17. கீதா மதிவாணன் கவிதைகள்! (17 -23)

**புலம்பெயர்தல் - கீதா மதிவாணன்**

பிறந்த நாட்டை விட்டு,
பேசியத் தமிழை விட்டு,
வளர்ந்த ஊரை விட்டு,
வளர்த்த உறவை விட்டு
புலம் பெயரும் பறவைகள் போல
இடம் பெயர்ந்து செல்கிறோம்!

வேரை மண்ணில் விட்டு,
விண்ணில் கிளையைச் செலுத்தும்
உயரமான ஊசியிலை மரங்களைப்போல
வாழ்வை இங்கே விட்டு,
வளத்தைத் தேடிச் செல்கிறோம்!

காற்றடித்தால் கலைகின்ற மழைமேகம் போலச்
சிதறியோடும் எம் நினைவுகளைச்
சேகரிக்க நினைக்கையில்,
கனவு வந்து கலைக்க,
கனவுக்கும் நனவுக்கும் இடையில்
ஊசலாடிக்கொண்டே உயரப்பறக்கிறோம்!

ஆயுளில் பாதியைப் பிறந்த மண்ணில் கழித்து,
மீதியை வேற்றுமண்ணில் கழிக்க விரைகிறோம்;
கூடவே,
குழந்தைகளின் குழந்தைப்பருவத்தையும்
அவரறியாமல் எடுத்துச் செல்கிறோம்!

புலம்பெயர்ந்த பறவைகள்
இனம்பெருகித் தாயகம் திரும்பும்;
ஊசியிலை மரத்தின் உத்திராட்ச விதைகள்
மண்ணில் விழும்;புதியவை முளைக்கும்;
கலைந்துபோன மேகங்கள் மீண்டும்
வானில் கூடி மழை தரும்;
எங்கள் வாழ்வும்,
மலர்ந்து, மணம் வீசி,
தாயகத்தில் நிலைபெறும் நாள்வரும் என்றே
நம்பிக்கையுடன் காத்திருக்கிறோம்!

### 18. மௌனம் - கீதா மதிவாணன்

மௌனம் எனக்குப் பிடிக்கும்,
அது என்னைக் காயப்படுத்தாதவரை;
மௌனம் அழகு; ஆனால்
உன் மௌனமோ,
என்னை அழச்செய்யும்;
மௌனத்திற்கு மொழி தேவையில்லை;
உன் மௌனம் பேசாத பேச்சில்லை;
என்னை நோகடிக்க,
நீ கையிலெடுக்கும் ஆயுதம்,
மௌனம்!
உன்னெதிரில் நிராயுதபாணியாக நான்!
உனக்கெதிராய் ஆயுதம் பிரயோகிக்க
எனக்கு ஆசையில்லை;
அமைதியை விரும்புகிறேன்;
அதற்காக,
உன் மௌனத்தையே
எனக்குப் பரிசாய் அளிக்காதே!
மௌனம் எனக்குப் பிடிக்கும்,
அதை,
நீ கையாளாதவரை!

### 19. குழந்தையின் தேடல் - கீதா மதிவாணன்

ஒவ்வொரு அரிசியிலும்
அதற்குண்டானவரின் பெயரிருக்கும்
என்றாள் அம்மா;
தந்தை வாங்கித்தர மறுத்தபின்னரும்
தேடுகிறது குழந்தை,
எந்தப் பஞ்சுமிட்டாய்ப் பொட்டலத்தில்
தன்பெயர் இருக்கக்கூடும் என்று!

### 20. வெற்றி - கீதா மதிவாணன்

வார்த்தைச் சாட்டைகளை
நீ சொடுக்கும் ஒவ்வொரு முறையும்
புன்னகைத்து வைக்கிறேன்;
சொல்லம்பு தைத்த வேதனையை
உள்ளுக்குள் வாங்கிப் புதைக்கிறேன்;
அடிக்க வரும் வேளைகளில்

அமைதியாய் அடங்கிப் போகிறேன்;
என் எதிர்வினை வெறுமையாய்ப் போனதில்
திகைத்து நீ பின்வாங்குகிறாய்;
வெற்றிக்களிப்பில் நான்!
ஆனாலும்,
அடக்கிவைத்த என் துயரம்,
ஏதாவது ஒரு கண்ணீர்த்துளியில் வெளிப்பட்டு
என் தோல்வியை உன்னிடம்
பறைசாற்றிவிடுமோ என்று சிறிது
அஞ்சத்தான் செய்கிறேன்!

**21. எல்லாம் அவள் விருப்பம் - கீதா மதிவாணன்**

திருமணம் நிச்சயமானது!
உனக்குப் பிடித்த நிறத்தில்
புடவை எடுத்துக்கொள் என்று
ஒப்புதல் தந்தார் அப்பா;
எந்த மாதிரி நகை வேண்டும் என்று
நச்சரித்தாள் அம்மா;
உன் ஆசைப்படியே
அழைப்பிதழ் அச்சடிப்போம் என
உறுதியளித்தான் அண்ணன்;
மாப்பிள்ளை யாரென்பது மட்டும்
முடிவு செய்யப்பட்டது,
அவள் சம்மதம் தேவைப்படாமலே!

**22. ஊடல் - கீதா மதிவாணன்**

உனக்கும் எனக்கும்
பிணக்குவந்தபோது,
கவிதையின் ஊற்றுக்கண் திறந்துகொண்டது;
எனக்குள் வாழும் கவிதாயினி,
என்னைக்கேளாமலே
என் சோகத்தையும்,
உன்மீதுள்ள என் கோபத்தையும்
கவிதையாய் வடித்தாள்;
என்னிடம் காட்டி,
கருத்துக் கேட்டாள்;
சரியாகத்தான் சொல்கிறாளென்று
எண்ணியபோது,
நீ வந்தாய்;

என் ஊடலை உடைத்து
என்னை அரவணைத்தாய்;
உன் பிடியில் இருந்தபோது,
நான் அவளிடம் சொன்னேன்,
'நீ எழுதியவை யாவும் பிதற்றல்;
கிழித்துப்போடடி' என்று!

**23. அறுந்த காதல் - கீதா மதிவாணன்**

என் அறைக்குள் வாழும்
அந்த வாலறுந்த பல்லி,
உன்னை எனக்கு நினைவூட்டிக்கொண்டேயிருக்கிறது;
முரண்பட்ட கருத்துகளால்
முற்றுப்பெற்ற நம் காதலை
நீ வெட்டிவிட்டபோது,
துடிதுடித்தது என் மனம்,
அந்தப் பல்லியின் அறுந்த வாலைப்போலவே!
மற்றுமொரு வால் வளர்ந்தாலும்,
அசலுக்கும், நகலுக்குமான வேறுபாடு
அதில் நன்றாகவேத் தெரிகிறது!

geetha.mathivanan@yahoo.co.in
பதிவுகள், அக்டோபர் 2008 இதழ் 106

## 24. ஹைக்கூ - துளிப்பாக்கள்- மாமதயானை[புதுவை]

எந்த பனித்துளிக்குள்
ஒளிந்துகிடக்கிறது......
என் கவிதை.

நிலவை படம்பிடிக்க
முடியாத வருத்தத்தில்......
வற்றியகுளம்.

தெளிந்தநீரில்
முகம்பார்த்தபிறகும்......
தெளியாத மனசு.

பாவலர்கள் எழுதிவிடுவார்களோ
பயந்துமுட்புதரில் மறையும்......
நிலவு.

நிசப்தமாய் இரு
இசை கேட்கலாம்......
மழை வரப்போகிறது.

தரிசுநிலக்காட்டில்
தவறி விழுந்த காகிதத்தில்......
அறுவடைக்கால கவிதைகள்

ஆயிரம்பேர் அழைத்தலும்
ஆகாயத்தில் தான்......
நிலவு.

பச்சைபசேலென
அடர்ந்த மரக்காட்டில்......
கோடாளிச்சத்தம்

அ ழகிய வண்ணத்துபூச்சி
ப றக்கும் திசையெல்லாம்......
உடன் பறக்கும்மனசு.

manisen37@yahoo.com
பதிவுகள், அக்டோபர் 2008 இதழ் 106

## 25. புதைகுழி வீடு ! -எம்.ரிஷான் ஷெரீப், இலங்கை -

அத்திவாரத்தை
வெடிபொருட்களால் நிரப்பி
அது இறுகிச் சேர்ந்திட
மனிதக் குருதி சேர்த்து
நெருப்புக்களால் ஆன
வீடொன்று கட்டு உனக்கு.
பேய்களே அதற்குக் காவலிருக்கட்டும் !

முன்பு புதைத்த
சவங்களைத் தோண்டியெடுத்து
அதன் எலும்புகளால் சில யன்னல்களும் வை.
இரவானாலும் - எந்த
இருளானாலும்
அவை மூடப்படாமலே கிடக்கட்டும் ;
அனல்காற்றும்,
அரைவேக்காட்டுப் பிணவாடையும்
மட்டுமே சுமந்தது உள்ளே வரட்டும் !

உருகிச் சிவந்து சூடு சுமக்கும்
தட்டை இரும்பினாலோர்
ஒற்றைக் கதவு வை.
வெப்பத்திறவுகோலால்
சாத்தான்களுக்கு மட்டுமதனைத்
திறந்து வழிவிட்டு நகர் !

பிணக்கால்களின் மூட்டுக்கள் கொண்டு
உன் சிம்மாசனம் அமையட்டும்,
மண்டையிலடித்துக் கொன்றொழித்த
பெண்களின் முத்துப் பற்களை
அழகுக்காகப் பதி ;
சிறு மழலையின் மண்டையோடு
செங்கோலின் கைப்பிடியை அலங்கரிக்கட்டும் !

இளம்பெண்களின் அலறலும்,
குழந்தைகளின் அழுகையும்,
மனிதர்களின் ஓலமும்
துயர் சுமந்த ஒப்பாரிகளும்
உன் வீட்டை இசையாக
நிரப்பட்டும் !

விருந்தினர் வருகையில்-கொதிக்கும்
விஷபானம் குடிக்கக் கொடு ;
அவர்கள் தொண்டை வழியே உருகிவழிகையில்
உன் வீரவாள் கொண்டு
வெட்டிக் கறி சமை !

அவர்கள் கண்களைத் தோண்டி-அதில்
ஆயிரம் அலங்காரம் பண்ணி,
நாக்குகளை அறுத்துத் துணைக்குத்
தொட்டுக் கொள்ளவை !

உன் பசி தீர்ந்ததா?
இப்பொழுது சொல்.
நான் சொன்னபடி கட்டிய
உன் வீட்டுக்கும்
என் தாய்தேசத்துக்கும்
என்ன வித்தியாசம் இன்று?

rishanshareef@gmail.com
பதிவுகள், அக்டோபர் 2008 இதழ் 106

## 26. அகரம்.அமுதாவின் கவிதைகள்! (26 - 28)

**அன்னை பாரதம்! - அகரம்.அமுதா**

எம்மதமும் சம்மதமாம்
இந்தியாவின் தேர்தலில்...
மும்மதத்தில் குத்துவெட்டு
முடியவில்லைக் கூக்குரல்...

கத்தியின்றி இரத்தமின்றி
பெற்றெடுத்த பாரதம்...
முற்றுமின்று இரத்தமின்றி
ஓடவில்லை ஆறெதும்...

காடுவெட்டி நாடுசெய்து
கண்டதுதான் என்னவோ?
வீடுகட்டி வாழும்கீழ்மை
விலங்குகள்நாம் அல்லவோ!

வாக்களித்து வாக்குவாங்கி
வாழ்க்கைபெற்ற பேர்களே!
வாக்களித்தோர் வாழ்வினிலே
வளர்ச்சியில்லை பாரிலே...

கள்ளமின்றிப் பள்ளமேடு
கடந்துசெல்லும் ஆறுகள்...
கல்லைக்கொண்(டு) அணையெழுப்பக்
கழனியெலாம் பாலைகள்...

அன்னையென்று பாரதத்தை
அன்றுத்தொட்(டு) இன்றுமே
சொன்னதெல்லாம் போதுமடா
சொன்னசொல்லைக் காப்போமே!

## 27. எல்லாமுமாகிய அண்ணலே! - அகரம்.அமுதா

விடியாத நாட்டிற்கு
விடிவெள்ளி நீதான்!
விடியலை வழங்கவந்த
வைகரையும் நீதான்!

துருப்பிடித்த உணர்வுகளைத்
துலக்கியவன் நீதான்!
துயிலோடும் தன்மானம்
ஊட்டியவன் நீதான்!

சுதந்திரப் பேச்செடுத்த
சூறாவளி நீதான்!
சுதந்திரம் பொழியவந்த
சூழ்மழையும் நீதான்!

பாரதத் தேரிழுக்கப்
புனைந்தவடம் நீதான்!
பாரதத் தேரோட்டிய
சாரதியும் நீதான்!

இந்தியா ஈன்றெடுத்த
இளையமகன் நீதான்!
இந்தியாவை ஈன்றெடுத்த
இளந்தாயும் நீதான்!

வெள்ளையனை விரட்டவந்த
வில்லம்பும் நீதான்!
கொள்கைகளை வளர்க்கவந்த
கோமகனும் நீதான்!

ஆய்தம்போல் தனித்துநின்ற
அகிம்சைவாதி நீதான்!
ஆயினும்என்? தேசத்தின்
அருஞ்சொத்தே நீதான்!

எல்லாமு மாகிய
அண்ணலும் நீதான்!
எல்;லாரது நெஞ்சிலும்
நிறைந்தவனும் நீதான்!

## 28. அருவி! - அகரம்.அமுதா

நான்
வேர்களை முகட்டில்
விரித்து
கீழ்நோக்கி வளர்கின்ற
தண்ணீர் மரம்...

விண்ணை முட்டும்
மலையென்னும் மரத்தின்
ஒற்றை விழுது...

உடலெங்கும் வெள்ளிச்
சலங்கைகள் கட்டி
நின்றாடும் நர்த்தகி...

குன்றுகளின் கூந்தல்...
பாறையாம் பானைகள்
பொங்கி வழிகின்ற
பொங்கல்...

நான்
நிற்பதாலேயே
ஆறுகள் நடக்கின்றன...

பாறைகள் என்
விளையாட்டு பொம்மைகள்...

நீங்கள்
கற்களை உரச
தீ பிறக்கும்
நான் உரச
மணல் பிறக்கும்!

நான் விழுகையில்
என் வீரிடலை
சங்கீதம் என்று
சாற்றுகிறீர்கள்

என் பேதைப்பருவத்தை
அருவி என்று

ஆர்க்கிறீர்கள்

மங்கைப் பருவத்தை
ஆறு என்றுக்கூறி
அணைக்கிறீர்கள்

என் மூப்பை
கடல் என்றுக்
கட்டியம் கூறுகிறீர்கள்

என்றேனும் நீங்கள்
எண்ணியதுண்டா?
அலைகள் யாவும்
எழுந்துநிற்கத் தோற்று
வழுக்கி விழுகின்ற
அருவிகளே என்பதை?

agramamutha08@gmail.com
அக்டோபர் 2008 இதழ் 106

## 29. என் நிலை என்ன? - செம்மதி -

காணவில்லைக் கணவரை-அவர்
காணாமல்போனவர் பட்டியலில்
காலங்கள் கடக்கின்றன கண்ணீரோடு
அதரவு யாரும் இல்லை
அனாதரவாய் நானிங்கே-என்
அருமைப் பிள்ளைகளை
ஆளாக்க வேண்டி
அயராது உழைக்கையிலே
ஆந்தை விழிகள் பல-என்னை
துகில் உரியப் பார்க்கிறது
அடி மனதில் வலியுடன்
ஆத்மதிருப்திக்காய்
ஆலயம்செல்கையிலெ
அயலவரும் குத்திகதை பேசிடுவார்
மனசெல்லாம் ரணமாச்சு
தமிழர் பண்பாடு என்று
குங்குமம் எடுத்து வைக்கையிலே
யாருக்காக இந்தப்போட்டு
எனவசைபாடுது பல குரல்
பொட்டின்றி பூவிழந்து
விதியில்நான் சென்று விட்டால
விசித்திரமாய்ப் பல கண்கள்மேயும்
என்உடம்பில்
துணையில்லை என்ற துணிவுடன்
நோகுது ஐயோ நெஞ்சம்
என்னவனைக்காலன்தான் கவர்ந்தானோ -இல்லை
என்னைக் காப்பாற்ற வருவாரோ?

எனக்கே என்னைப்புரியவில்லை
என்நிலை என்ன தெரியவில்லை???

## 30. முதுகில் வரையப்பட்ட பயங்கர ஓவியங்கள் - செம்மதி -

நீ
நீயாகவேஇருந்தாய்
உன்மனததில்
சாத்தானின் சகாக்கள்
ஊடுருவும்வரை
நீ என்னை
அன்புடன்
கட்டியணைக்கிறாய்
என்றே நான்
நம்பினேன்
உன் கால்களால்
படுகுழி ஒன்றுதோண்டப்படுவதை
அறியாது
நீ அன்பு போர்த்து
வந்தாய்
நான்
உன்னை நம்பினேன்
பற்கள் வெளித்தெரியும்படியான
உதடு பிரிப்புக்களை
அழகிய சிரிப்பு என்றே
நான் ஏமாந்தேன்
என்முதுகில் நீ வரைந்த
பல பயங்கர
ஓவியங்களை
என்னால்
காணமுடியாது போயிற்று
நானும் நீயும்
சேர்ந்திருந்த
இறுதிக் காலங்களை
நினைத்துப்பார்க்கிறேன்
இருண்டதும்
கொடூரமானதுமாய்
எனக்குள் பல
கேள்விக்குறிகளாய்
சிதறிக்கிடக்கின்றன.
இப்போதெல்லாம்
உன்னைப்பற்றிய
நற்கருணை
ஆராதனைகள்

எனக்குள்
இடம்பொறுவதில்லை
எனது பாதங்கள்
வலிகளைத்தாங்கி
தொடர்ந்து பயணிக்கிறது......

chemmathy@gmail.com
அக்டோபர் 2008 இதழ் 106

## 31. கண்ணில் மையெழுதி - சக்தி சக்திதாசன் -

கண்ணிரண்டில் மையெழுதி - எனைக்
கணப்பொழுதில் உன் வசமாக்கி
காணமல் போனவளே ! ஏனெனை
கனகத்தே தவிக்க விட்டாய் ?

கார்முகிலாய் கூந்தல் விரித்து - உன்
கருவிழியால் கதை பேசி
காதல் எனும் கடலினிலே
கவிழ்த்து விட்ட காரிகையே !

வானத்திலே வலம் வரும் அந்த - வட்ட
வண்ண நிலவாக பூவதனம் அமைந்தவளே
வந்திடலாம் அமாவசை நிலவதற்கு
வாராது ! வாராது ! உன் நினைவின் முடிவெனக்கு

வஞ்சியென்று உன்னை நானும் விளித்ததினால் - நீயும்
வஞ்சித்து பார்ப்பதென்று முடிவெடித்தாயோ சொல்?
விஞ்சி நிற்கும் நினைவுகள் எந்தன் நெஞ்சில்
விடையறியா வினாவாக்கி நீயெங்கே சென்றாயோ ?

காலமகள் கணக்கினிலே பொன்மானே ! - உனக்
காணாத பொழுதெல்லாம் சூனியமாய் போகுதடி
காதலது நோய் தானோ ? காலனவன் ஆயிதமோ ?
காத்திருந்து காத்திருந்து காற்றோடு போவேனோ ?

ssakthi@btinternet.com
அக்டோபர் 2008 இதழ் 106

**32.. குன்னக் குடி வைத்தியநாதன் - மட்டுவில் ஞானக்குமாரன் (யேர்மனி) -**

பொட்டு வைத்த குயிலின்
மூச்சும்
குன்னக்
குடியின் வயிலின் பேச்சும்
நின்று கொண்டது....

இவன்
பெயர் வைத்தியநாதன்
தொழிலினிலும்
இவன் வைத்தியன் தான்
வித்தியாசம் என்னவெனில்
இவன் மட்டும் தான்
மருந்து கொடுக்காமேலயே
நோய்களைக் குணமாக்கியவன்.

இவன் வயலின் பாட்டிசைத்தால்
பாடல்கள் பூப்படையும்
இவன் விரல்கள் தழுவினால்
வயலின் நரம்புகள்
மூப்படையும்

இவனால்
காற்றும்
இசையைக் கற்றது.
இவன் கூற்றும்
இசைப் பேறு பெற்றது.

இவன்
வயலினுக்காக
எடுத்தான் ஒரு அவதாரம்
அந்த வயலின் தான்
இவனுக்கு
மறுதாரம்

வயலின் தான் இவனது
நுரையீரல்
அதனாலே தான் சுவாசித்தான்

வயலின் தான் இவனது
உதடு
ஆதனால்த் தானே வாசித்தான்

இரண்டையும்
அவன் இப்போ நிறுத்தினான்.
ஊசி முனையிலே
எமை எல்லாம் நிறுத்தினான்

maduvilan@hotmail.com
பதிவுகள், நவம்பர் 2008 இதழ் 107

## 33. மாமதயானையின் காதல் கவிதைகள்

இப்பொழுது
நினைத்தாலும்
சிரிப்புதான் வருகிறது
என்மனதை
படிக்கத்தெரியாத உனக்கா
நிறையப்புத்தகங்கள் பரிசளித்தேன்

உன் கூந்தல்
காற்றில்
அசைந்து எழுதும்
அற்புதமான
கவிதைகளை விடவும்
சிறப்பான கவிதைகளை
ஒரு பொழுதும் என்னால்
எழுதிவிட முடியாது

உனக்கு
பரிசுப்பொருளாகத்தர
என்னிடம் எதுவும் இல்லை
என் பரிசுத்த இதயத்தைதவிர

எந்தப்பெண்ணை
பார்த்தாலும்
அவர்களுக்கு
பின்னேயே செல்கிறது
என் கவிதை மனம்

வருங்காலத்தில்
என்ன ஆகப்போகிறாய்
ஆசையுடன் கேட்கிறேன்
நம் குழந்தைகளுக்கு
அம்மாவாகப் போகிறேன் என்று
வெட்கத்தோடு சொல்கிறாய்

manisen37@yahoo.com
நவம்பர் 2008 இதழ் 107

## 34. சென்ரியூ-நகைப்பாக்கள் மாமதயானை

சீமானின்மாளிகை இடிந்தபிறகு
நன்றாகவே தெரிகிறது
ஏழைகளின் குடிசைகள்

அமைச்சருக்கு போட்ட துண்டு
எப்படி விழுந்தது
பட்ஜெட்டில்

பால் காய்ச்சித்தான்
குடித்தனம் போகவேண்டும்
சாராயம் காய்ச்சுபவனும்

நிறைய மிட்டாய்கள்
வாங்கித்தரும் தாத்தாவிற்கு
பாவம் பல்லேஇல்லை

தமிழ் நாட்டில்
சாதிக்கவும் தடை
சாதி

யாருடைய ஆசியோ ?
உயர்ந்து கொண்டேபோகிறது
விலைவாசி

பகுத்தறிவு இல்லாதவனின்
உலக அனுபவம்
வெங்காயம்

சுருக்கமாக
பேசிமுடித்தார்
விரிவுரையாளர்

தன்னம்பிக்கையை
இழக்கவில்லை
விபத்தில் கைஇழந்தவன்

வெற்றியை
நெருங்கிவிட்டான்
பலமுறை தோற்றவன்

சலனமில்லாத குளம்
துண்டிலில் மீன்சிக்குமா
சலனத்துடன் மனம்

இதயம் பலவீனமானவர்கள்
திடப்படுத்திக்கொள்ளுங்கள்
பாடகர் பாடப்போகிறார்

வீடு முழுக்க நிறைந்திருக்கிறது
விடுமுறைக்கு வந்துபோன
பேத்தியின் சிரிப்புசத்தம்

ஆதிக்க வர்க்கத்தின்
ஆட்டத்தை அடக்கவே
அதிர்கிறது பறை

நிறைய பொம்மைகள்
இருந்தும் அழகாயில்லை
குழந்தைகள் இல்லாத வீடு

manisen37@yahoo.com
பதிவுகள், நவம்பர் 2008 இதழ் 107

## 35. மணிவிழா! - ராஜிட் அகமட் -

*[எனக்கு இந்த மாதம் அறுபது வயதாகிறது அதுதான் மணிவிழாவாம் அதையொட்டிய சிந்தனைகள் கவிதையாக]*

மணிவிழா
மனிதர்களுக்குத்தான்
மணிவிழாக்கள்

மனிதர்களுக்காய் வாழும்
மாடு மரங்களுக் கில்லை
மணிவிழாக்கள்

இயற்கையை
அண்டி மட்டுமே மாடு மரங்கள்
அண்டியும் தாண்டியும் மனிதர்கள்

தாண்டியதால்தான் இன்று....

சகதி நீச்சல்கள்
சக்தி விரயங்கள்

மல்லாந்து துப்பும் மதங்கள்
மலர்களைத் தூற்றும் மதியினர்

கந்தகர் கலந்த காற்றுக்கள்
வெந்துபோன காதல்கள்

காலன்களாய் வாகனங்கள்
கலப்பட தானியங்கள்

ஆக்ஸிஜன் முட்டும் சொற்கள்
ஆலம் கக்கும் பற்கள்

மனைவி மக்கள் நூல்களில்
மண்டை குடையும் சிக்கல்கள்

தாக்கியும்
தாங்கியும் இதயங்கள்

மாடு மரங்களுக்கேது

இத்தனை வலிகள்

நியாயம்தான்
இத்தனையும் தாங்கும்
மனிதனுக்குத்தான் தேவை
மணிவிழாக்கள்

rajid_ahamed@yahoo.com.sg
பதிவுகள், டிசமபர் 2008 இதழ் 108

## 36. குந்தி இருந்த நிலமொன்று கைமாறிப் போகிறது....! - மட்டுவில் ஞானகுமாரன் -

ஒரு ஏழையின் இருபதாண்டுக்
கடும் தவமே
கைமாறிப்போகும் இந்தக் கல்வீடு

போரிலே போனவை போக
குந்தி இருக்கவென்று
எஞ்சிய
காணியே
இன்றோடு களவாடப்படுகிறது.

நான் தவழ்ந்த மண்ணை தரிசிக்கவும்
ஏன்னைத் தழுவிய தென்றலை
பரிசிக்கவும்
இன்றோடு தடையாகிறது.

வயிற்றுக்கு
சோறூட்ட மறுந்திருந்தாலும்
நீர் ஊற்ற மறந்தறியா
மரங்களுக்கு
விடைகொடுக்கும் சமயமிது

படிப்புச் செலவுக்கு
தீனி போடவோ அன்றி
வறுமையின் கொடுவாய்க்கு
தாள்ப்பாள் போடவோ
எண்ணிய தந்தை மீது
வருத்தமில்லை

ஏனெனில்
இது வறுமைக்கு வாழ்க்கைப்பட்ட
ஏழைகள் வாழும் பூமி
வாழைகள் போலவே
தொடருகிறது
இந்தத் தீ

ஒவ்வொரு ஓட்டையும் கேள்
சொல்லும்
சுவர் எழுப்ப என்
தாய்பட்ட பாட்டையும்

விற்ற தோட்டையும்

ஒவ்வொரு கல்லையும் கேள்
சொல்லும்
கடன் தந்தவர் என் தந்தைக்குத்
தந்த தொல்லையை

இந்த மண்
புல்
புதர்
முளைக்காத நாகசாகி ஆகினால் என்ன
துளிநீர் கிட்டாத
சகாராவாக மாறினால் என்ன
அது தான்
அது தான் நமக்கான பூம்புகார்

ஈன்ற பின்னரும்
வயிறைவிட்டு பிரிய மறுக்கும்
கங்காருக்கு இழைத்தவனா நான்.

தாய் மண்ணை தாரைவார்க்கும் அளவுக்கு
தைரியம் உள்ளவனா
இவன்.

இந்த மண்ணின்
ஒவ்வொரு துகளிலும்
என் முன்னோரின் மூச்சிருக்கிறது.
இந்த மூச்சுக்கு முடிவுரை எழுதிடவே
வட்டிக்காரன் எனும்
வேட்டைக்காரன் வருகிறான்.

அந்த தனவானின் பெட்டிக்குள்ளே
பூ+ட்டிக்கிடப்பது
ஒரு வீட்டின் பத்திரமல்ல
ஒரு ஏழையின் ஆத்மா

பணக்கோழியின்
அளவென்னவோ கடுகுதான்
ஆன போதிலும்
அது போட்ட வட்டி முட்டையோ
மட்டும் மலையளவானது.

அதைக்கட்டி முடிக்க வக்கற்றுப் போனதினாலேயே
களவுபோகிறது
இவனது வளவு.

ஆங்கே தங்க வயல்களில்லை
எண்ணைக் குளங்களுமில்லை
ஆனாலும்
எண்ண முடியாத
ஒரு பிரபஞ்சத்தின் குழந்தை
அந்த அழகே
இன்றோடு கைமாறிப் போகிறது.

(ஒரு வட்டிக்காரனின் சூழ்ச்சி இரையாகி எனது இருப்பிடம் பறிக்கப்பட்ட போது)

maduvilan@hotmail.com
பதிவுகள், டிசமபர் 2008 இதழ் 108

## 37. இருந்து போகிறேன் பட்டிக்காட்டானாகவே - எஸ்.எம்.ஜுனைத் ஹஸனீ. -

மயிரில் மையிட்டு
உயிரில் பொய்யிட்டு வைக்கும்
நாகரிக ஊனப்புத்தி உன் புத்தியென்றால்
இருந்து போகிறேன் பட்டிக்காட்டானாகவே

மூடிக் கிடத்தல்களை விட
ஆடிக் கழித்தல்களில் அரங்கத்தோடு சேர்த்து
அங்கங்களுமதிரும் அரைகுறை அம்மண
அந்நிய கலாச்சார ஒத்தூதி நீயென்றால்
இருந்து போகிறேன் பட்டிக்காட்டானாகவே

வடித்துத் தீர்த்துக் களைத்த
இல்லாதார் வியர்வையுறிஞ்சி
உன் பித்தட்டிட்டு நிரப்பும்
உயிர் பேணா உயர் ஜாதி நீயென்றால்
இருந்து போகிறேன் பட்டிக்காட்டானாகவே

உன் ஒத்தார்களுக்கு உச்சங்களும்
பின் மத்தார்களுக்கு மிச்சங்களுமெனும்
மூர்க்க முதலாளி ஜாதி நீயென்றால்
இருந்து போகிறேன் பட்டிக்காட்டானாகவே

வெண் பால் சுரக்கும் தாய் முலை விட்டு
வன் கள் வடியும் அந்நிய முலை தேடியோடும்
அறிவு கெட்ட அந்நிய ஆதரவன் நீயென்றால்
இருந்து போகிறேன் பட்டிக்காட்டானாகவே
இறந்தும் போகிறேன் பட்டிக்காட்டானாகவே.

junaidhasani@gmail.com
பதிவுகள், டிசமபர் 2008 இதழ் 108

## 38. வாலாட்ட கற்றுக்கொள்….கவிஞர் ஈழநிலா (பொத்துவில் அஸ்மின்)

கேள்வி கேட்பவர்க்கு
கேழ்வரகும் இல்லையப்பா…
'ஆமா'போடப்பா…
அத்தனையும் கிடைக்குமப்பா…

பாழான உலகத்தில்
பல்லிளித்து முன்னேறு…
குழிதோண்டி நீ உயர்ந்து
குலப்பெருமை நிலைநாட்டு….

வாள்பிடிக்க எண்ணாதே…?
வாய்காட்டி நிற்காதே…
வாலாட்ட கற்றுக்கொள்
வாழ்க்கை இருக்குதப்பா…

காகம் அழகென்று
கருத்துரைத்தால் அதிகாரி…
புறாப்போன்று இருக்குதென்று
புன்னகைக்க பழகிக்கொள்…

பதவிபெற வேண்டுமென்றால்
பாய்விரிக்கக் கத்துக்கொள்..
முதல்பரிசு வேண்டுமெனில்
முதலிரவுக் கொத்துக்கொள்….

'இன்டர்வியுவில்' சித்திபெற
'இங்கிலிசும்' உனக்கெதற்கு…?
காசுபணம் இருக்கிறதா….
கழுதைக்கும் இடமிருக்கு…

எதிர்த்துப் பேசாதே…
எதிர்காலம் மடிந்துவிடும்
எடுபிடியாய் மாறிக்கொள்
'எம்பி'யாய் மாறிடலாம்…

உண்மையாய் உழைக்காதே…
உன்தலைக்கு வேட்டுவரும்..
பொறுப்பாக நடிதம்பி
பொன்பரிசு வீடுவரும்…

சமூகம் என்றோ டாதே..
சாவுமணி அடிப்பார்கள்...
சுயநலத்தை கையில்கொள்
சுகத்தோடு வாழ்ந்திடுவாய்....

kavingerasmin@yahoo.com
பதிவுகள், டிசம்பர் 2008 இதழ் 108

## 39. நான்! - ஆர்.நாகப்பன் -

யாரும் அமராத
ரயில் பெட்டியில்
பயணிக்கும் வண்ணத்து பூச்சியாய்
கனமான நிமிஷத்தில் இருந்து
உருவாகும் கவிதையாய் இருக்கிறேன் எப்போதும்.....
சுழலும் மின்விசிறியின்
இறக்கையின் வேகம்
இயலாதாகினும் படபடக்க முடிகிறது
என்பதான சுயத்தில்
தண்டவாளத்திலும்
அமர்ந்து போக முடிகிறது என்னால்!

இன்னும்
வயதுக்கே வராத சிறுமி ஒருத்தியின்
அளவுக்கு மீறிய வளர்ச்சியில்
எச்சில் ஒழுகும்
நடுத்தர வயதுக்காரனின்
காமத்தில் கொப்பளித்து
வெளி கிளம்புகிறது
அடையாளம் தொலைத்த ரெளத்திரம்!

நிறம் இழக்கிற
சுயத்தில்
வெள்ளையாய் தூசியாய்,
இருந்து விட்டு போகட்டுமே எப்போதும் மேனி.....

அழுக்கு பிச்சைக்காரியின்
உப்பிய வயிற்றுக்குள்
ஒளிந்துகொண்டிருக்கும் கண்தலாக
இயல்பாகவே இருந்துவிடுகிறேன்
எறும்புகள் மொய்க்காதவரை

வண்ணம் இல்லாவிட்டாலும்
பூச்சி என்று சொல்வதில்லை யாரும்!

nagaa72@gmail.com
பதிவுகள், ஏப்ரல் 2008 இதழ் 100

## (40 -46) அனாமிகா பிரித்திமாவின் கவிதைகள்...

### 40. மாறினேன்...

தங்களின் ஆசைக்காக...
என்னை மாற்றிக்கொண்டேன்...

ஏதாவது ஒரு மாறுதலின் போதாவது...
என்னைப் பிடிக்கும்...
என்று நம்பி...

இலையாய் மாறினேன்...
என்னை மிதித்து விட்டீர்கள்

பூவாய் மாறினேன்...
என்னை கசக்கி விட்டீர்கள்

காயாய் மாறினேன்...
ஏன் முகம் சுழிக்கிறீர்கள்...
துவர்க்கிறேனா?

கனியாய் மாறினேன்...
இம்முறையும் என்னை உமிழ்ந்து விட்டீர்கள்...
புளித்துவிட்டேனா?

கடைசியாய்...வேராய் மாறினேன்...
அய்யோ... என்னை முழுதாய்...
வெட்டி சாய்த்து விட்டீர்களே...

எதுவாக மாறி வந்தால் தங்களுக்கு பிடிக்கும்?
சொல்வீர்களா...?

### 41. மறக்க வேண்டும்...

தினமும் உங்களை....
மறக்க வேண்டும் என்று...
முயல்கிறேன்...
தோல்வியடைகிறேன்...

வருடங்கள் உருண்டோடிவிட்டன...

நீங்கள் என்னை மறந்திருப்பீர்கள்...

ஆனால் என் ஒவ்வொரு செல்லுக்குள்ளும்...
நீங்கள் நுழைந்து விட்டீர்கள்...

அதை குளோனிங் செய்தால் கூட ...
நீங்கள் இருப்பீர்கள்...

வெட்டி எறிந்தால் கூட...
ஹைட்ராவைப் போல் முளைப்பீர்கள்...

வந்து விடுங்கள்...
என் கடைசி செல்...
கருகும் முன்பாவது...

**42. பிற(ரி)ந்த நாளா ?...**

தங்களது ஒவ்வொரு பிறந்த நாளையும் ...
நமக்கு திருமணமான போது வந்த...
முதல் பிறந்த நாளைப் போல ...
கொண்டாடத்தான் ஆசை...
ஆனால் துரதிஷ்டம்...
இப்போது...
பிரிந்த நாளை ....
காணும்படி ஆகிவிட்டது...
விதி வலியதா?...
இல்லை...
வலியைக் கொடுக்கக் கூடியதா?...
ஏன்.... ஏன்.... ?
அதற்கு என்மேல் இவ்வளவு கோபம்?...
அப்படி ஒரு பெரும்பாவியா...
நான்?...

**43. பழையவை...**

பழையவைகள் எல்லாம்...
மாற்றப்படும்...
மாற்றம் ஒன்றே...
மாறாதது...

சம்மதிக்கிறேன்...

ஆனால் ஒன்றை மட்டும்...
மாற்ற இயலாதே...
என் இதயத்தை...
அதில் இருப்பது...
என் உயிர்...
என் காதல்...
பழசு என்று...
அதை மாற்ற முடியுமா?...
மாற்றினால் இருப்பது?...
காதல் (உயிர்) இல்லா உடம்பாயிற்றே?...

**44. நினைப்பதுண்டா?...**

காதலிக்கும்போது...
என்னைக் கேட்டீர்கள்...
செல்லம்...
ஒரு நாளைக்கு எத்தனை தடவை....
என்னை நினைப்பாய்?...
இன்று நான் கேட்கிறேன்...
ஒரு தடவை...
ஒரு தடவையாவது....
ஒரு நாளில்...
வாரத்தில்...
மாதத்தில்...
வருடத்தில்...
என்னை ...
நினைப்பதுண்டா?...

**45. உங்களை பற்றி...**

நிலத்தைப் பற்றி...
நீரைப் பற்றி...
காற்றைப் பற்றி...
வானைப் பற்றி...
பனியைப் பற்றி...
என்னைப் பற்றி...

எதைப் பற்றி எழுவதற்கு...
நினைத்தாலும்

உங்களைப் பற்றி...
மட்டுமே...
எழுதமுடிகிறது....
ஏன் ?.....

**46. மௌனம்...**

கடற்கரையில் மௌனம்...
அலைகளை ரசிப்பதற்காக...

பள்ளியில் மௌனம்...
பாடம் பதி(புரி)வதற்காக...

தியானத்தில் மௌனம்...
மனதை ஒருமுகப்படுத்துவதற்காக...

தோல்வியில் மௌனம்...
வெற்றி பெறுவதற்காக...

ஆனால் தங்கள் மௌனம்...
எதற்காக...?
என்னைக்...
கொல்வதற்காகவா...?

anamikapritima@yahoo.com
பதிவுகள், ஏப்ரல் 2008 இதழ் 100

## 47. எழுதுகோல்! அகரம்.அமுதா

பைதன்னில் இருப்ப தாலே
 பயனொன்றும் இல்லை என்றே
கைதன்னில் தொட்டெ டுத்தேன்
 காகிதப் பரப்பி லெங்கும்
மைதெளிப்பாய் என்ப தாலா?
 மலரேட்டில் கவிதை யென்னும்
மெய்தெளிப்பாய் என்றே யன்றோ
 விழைந்துன்னை தொட்டெ டுத்தேன்!

என்னருமை எழுது கோலே!
 எடுத்துன்னை திறக்கும் போதே
பொன்னருமை ஏடாம் தன்னில்
 பூக்காதோ கவிதை கோடி?
பண்ணருமை உணர்ந்த தாலே
 பைந்தமிழைப் போற்று தல்போல்
உன்னருமை உணர்ந்த தாலே
 உளத்தருகே உன்னை வைத்தோம்!

தலைக்கனத்தால் ஆடும் யாரும்
 தலைக்குனிய நேரும் என்ற
தலையாயத் தத்து வத்தை
 தரணியுள்ளோர்க் குணர்த்தத் தானோ
தலைக்குனிந்தே ஆட்டம் போட்டு
 தற்குறிகள் கற்கும் வன்னம்
தலைப்பணிவை ஏட்டில்; செய்து
 தலைநிமிர்ந்தாய் பைகள் தோறும்?

கத்தியும்கை வேலும் சூலும்
 கடுங்கூரென் றுரைப்பார் கூடப்
புத்தியினால் உன்னை யன்றோ
 புகழ்கின்றார் கூரே என்று!
கத்தியினை எடுத்தார் சாவும்
 கத்தியினால் தானாம்; உண்மை!
கத்தியினும் கூராய்! உன்னால்;
 கமழ்கிறதே கற்றோர் வாழ்வு!

agramamutha@yahoo.com
பதிவுகள், ஏப்ரல் 2008 இதழ் 100

## 48. கூவத்தமிழன் கூவுகிறேன்! - அத்திவெட்டி ஜோதிபாரதி -

அழுக்குகளின் வாசம்
அவலங்களின் குரல்
கொசுக்களின் இசை முரசும்
கொடுக்காமல் குருதி உறிஞ்சும்
படித்து உரை இல் பிறக்கும் குழந்தை
பார் போற்றும் தலைவர்கள் வரும் பாதை
சிங்காரச் சென்னை எல்லாம் வெறும் போதை -நாங்கள்
சிரமாட்டி கேட்டுக்கொள்ளும் பேதை
சுத்த குடிநீர் இல்லாமல் தவிக்கும் -இந்த
கோலத்தை எந்த நாய் பார்க்கும்
கண் குருடாக இருந்தாலும் தெரியும் -நாற்றம்
கண நேரத்தில் நாசியை பிளக்கும்
தொழிற்சாலை சாரம் இங்கு வடியும்
தூக்கம் இன்றி வாழ எப்படி முடியும்
எட்டிப்பார்த்தால் எல்லாம் மாளிகை
எட்டடி குடிசையில் ஏழைகளின் வாழ்க்கை
சாக்கடை சகதி
அதுதான் எங்கள் வசதி
இந்த வாழ்க்கையே பழகிப்போச்சு
இந்த வாசமே வாழ்க்கையாச்சு

jothibharathi@yahoo.com

பதிவுகள், ஏப்ரல் 2008 இதழ் 100

## 49. சறுக்கிய தேசத்திற்கு நறுக்கு வினாக்கள் - அத்திவெட்டி ஜோதிபாரதி -

தினம் தினம்
கழுகாய் பருந்தாய்
வட்டமிடும்
வஞ்சக வானூர்தி
கருவறுக்க
கோழிக்குஞ்சாய்
எம் மக்கள்

இடிமுழக்கம் எங்கு பார்த்தாலும்
ஈழத்தமிழகத்தில் -குண்டுகளை
அள்ளி எரிந்து ஆர்ப்பரிக்கும்
அரக்கர் கூட்டம்

கைக்கெட்டும் தூரத்தில்
எம் உறவுகளின் தாய்த்தமிழ்நாடு

கேட்காமல் கேட்கும்
எம் உறவுகளின் ஓலங்கள்

இவன் வாழும் நாடோ காந்தியின்
அகிம்சை வழி

நேருவின் சமாதனப்புறா-அதுவோ
முதுகில் அடித்தவனை
முழுவதும் தொழும்

தாய்த்தமிழ் நாடென்ற பேர் எதற்கோ?

கூட்டுப் பயிற்சியும்
கொஞ்சிக்குலாவலும்
நம் குல நாசம்
செய்வதற்கேயன்றி வேறெதற்கு?

ரகசியப் பேச்சுக்களும்
ராடார் தளவாடங்களும்

ஒளிவு மறைவற்ற
ஒப்புதல் வாக்குமூலங்களும் -எம்
நலிவடைந்த உறவுகளை

நசுக்கத்தானே?

சமாதானம் என்று சொல்லி
சவ வண்டியனுப்பும்
சறுக்கிய தேசத்தின்
ஆற்றாமைத் தமிழன்
அழுகிறான் இங்கே
அவனுக்கு நாடிதுவே
வேறில்லை அவனியிலே

கண்ணீருக்கு தாழ்ப்பாள் போடும்
கயவர்கள் கூட்டம்
கட்சிக்கொடி ஏந்திக்
கல்லாக்கட்டும்

உள்ளொன்று வைத்து
புறமொன்று பேசும்
ஒப்பனைத் தமிழன்
ஒளிரா நிலவு அமாவாசை

உணர்வில்லா உறக்கம் பாவம்
உடுக்கை மானம் உண்டோ அறியேன்...

jothibharathi@yahoo.com

## 50. முதுகுமுறிய பொதிசுமக்கும் ஒட்டகங்கள்! - துவாரகன் -

நாங்கள் பொதி சுமக்கும் ஒட்டகங்கள்
முதுகு முறிய பொதி சுமக்கும் ஒட்டகங்கள்

மூச்சிரைக்க இழுத்துச் செல்லும்
வண்டில் மாடுகள் போல்
நாங்கள்
முதுகுமுறிய பாரம் சுமக்க தயாராய் இருக்கிறோம்.
சாட்டையும் விரட்டும் இலாவகமும்
உங்களிடம் இருக்கும் வரை
நாமும் சுமந்துகொண்டே இருப்போம்.

செல்லும் தூரமோ,
பொதிகளின் அளவோ
எதைப் பற்றியும் நீங்கள்
கணக்கிடத் தேவையில்லை.
ஏனெனில் சுமக்கப் போவது நாங்கள்தானே.

ஓய்வு கிடைக்கும்போது அசைபோடவும்
நீர் கண்டபோது நிரப்பவும்
பாலைவனம் கடப்பதற்கு உம்மைச் சுமக்கவும்
நாங்கள் ஒட்டகங்கள் தயாராய் இருக்கிறோம்.

இன்னமும் வானம் பார்க்கும் கூரையும்
சில்லறை பொறுக்கும் கரங்களும்
கூடவே எங்களுடன்தான்.

என்றாலும் நீங்களும் நாங்களும்
சாப்பிடுவது ஒரு சாண் வயிற்றுக்குத்தானே.

mskwaran@yahoo.com
பதிவுகள், ஜூன் 2008 இதழ் 102

## 51. தங்கப் பெண்ணுக்கொரு தமிழ் தாலாட்டு! - கனிஷ்கா, தென்காசி -

ஆராரோ பாடிடுவேன்! அமுதே எனப் போற்றிடுவேன்!
தாலாட்டுப் பாடிடுவேன்! தங்கமே நீயும் கண்ணுறங்கு!
செந்தமிழ்ப் பெண்ணே! என் சிங்காரக் கண்ணே!
செந்தாழம்பூவே! என் செங்காந்தள் மலரே!
ஆராரிராரோ! அரி ஆராரிராரோ!

தத்தி நடக்கையிலே தங்கக் கொலுசு மாட்டிடுவேன்
துள்ளித் திரிகையிலே வெள்ளிக் கொலுசு பூட்டிடுவேன்
மான்போல துள்ளி நீயும் மயில்போல ஆடு!
கிளிபோல கொஞ்சி நீயும் குயில் போல பாடு!

ரோசாப்பூ உடுப்புப் போட்டு! தாழம்பூ தலையில் சூட்டி!
முல்லைப்பல் சிரிப்புக்காட்டி! செல்லமே நீ நடந்தால்
செவ்வானம் வெளுக்கும்! அந்த சூரியனும் திரும்பும்!
செந்தமிழ்ப் பெண்ணே! என் சிங்காரக் கண்ணே!
ஆராரிராரோ! என் கண்ணே நீ உறங்கு!

பட்டுப்பாவாடை கட்டிக்கிட்டு பதக்கம் ஒன்னு மாட்டிக்கிட்டு
பாரிஜாதம் சூட்டிக்கிட்டு பாதையோரம் நடந்து வந்தால்
தெய்வம் என்று எண்ணி கோயில் தேரும் வந்து நிற்கும்!
மலர்க்கூட்டமென்று எண்ணி அந்தப் பட்டாம்பூச்சி சுற்றும்!

பள்ளிக்குச் செல்கையிலே பவளக் கொலுசு மாட்டி நீயும்
துள்ளிவரும் ஓசைகேட்டு தூவானம் தரையிறங்கும்
மலர்போல சிரித்து முழு மதிபோல ஒளிரு!
செந்தாழம்பூவே! என் செங்காந்தள் மலரே!
ஆராரிராரோ! என் அழுகுச் செல்லம் உறங்கு!

தாவணி போட்டு நீயும் தாரகைபோல் நடந்து வந்தால்
தரிசு நிலம் செழித்துவிடும் தங்கமணி நெல் விளையும்
ஏழுகலம் விளையும்! இங்கே கோபுரப் போர் ஏறும்!
அந்த நிலமகளும் நீயே! எங்கள் அலைமகளும் நீயே!

சோலையில் நீ நடந்தால் சொரிந்து விழும் பூக்களெல்லாம்
நதியோரம் நீ நடந்தால் நாடிவரும் மீன்களெல்லாம்
உன் அழகு விழிகள் பார்த்து அந்தக் கயல்கள் நீந்த மறக்கும்!
உன் காந்த விழிகள் பார்த்து அந்த நதியும் திசையை மாற்றும்!
ஆராரிராரோ! என் தங்க மகளே உறங்கு!

ஆற்றிலே நீராடி! அழகுக் கூந்தல் அலையாடி!
காற்றோடு உறவாடி! கருங்கூந்தல் விளையாடும்!
அதைக் கார்மேகம் கண்டு இங்கே கண்ணீர்விடும் வந்து!
அந்த மயிலும் தோகை விரித்து மழை வருமே என்று ஆடும்!

வட்ட முகமழகு! மஞ்சள் சிவப்பழகு!
நெத்திப் பொட்டழகு! நெத்திச்சுட்டி உனக்கழகு!
அந்த முழுமதியும் வந்து உன் முகம் பார்த்து நிற்கும்!
அந்த வானவில்லும் வந்து உன் வண்ணம் கண்டு சொக்கும்!
ஆராரிராரோ! என் அருமை மகளே உறங்கு!

அருவிக் கரையோரம் அழகாக நீ நடந்தால்
ஆர்ப்பரிக்கும் அருவிக்கூட்டம் ஆனந்தக் கூத்தாடும்!
சந்தன வாசம் கொண்டு அங்கே சாரல் மழை பொழியும்!
தென்றலும் அங்கே நின்று உன் தேகம் தொடத் துடிக்கும்!

சட்டங்கள் படித்திடுவாய்! பட்டங்கள் வாங்கிடுவாய்!
திட்டங்கள் போட்டிடுவாய!; தீயவற்றை விரட்டிடுவாய்!
அந்தக் கலைமகளும் வந்து உந்தன் நாவில் குடி புகுவாள்!
அந்த மலைமகளும் வந்து வெற்றிமாலை உனக்குத் தருவாள்!
ஆராரிராரோ! என் தெய்வ மகளே உறங்கு!

பெரியோரை மதித்திடணும்! பேருபல பெற்றிடணும்!
சான்றோரை துதித்திடணும்! சாதனைகள் புரிந்திடணும்!
தமிழ்ப் பண்பாடு காத்து நீயும் பார்போற்ற வாழு!
செந்தமிழ்ப் பெண்ணே! என் சிங்காரக் கண்ணே!

பெண்ணுக்கொரு இழிவு வந்தால் எதிர்த்து நீ நின்றிடணும்
தமிழ்ச் சொல்லுக்கொரு குறையும் வந்தால் ஏனென்று கேட்டிடணும்!

பெண்ணுரிமை காத்து தமிழ்ப் பெண்ணாக வாழு!
அந்தப் பாரதியும் கண்ட புதுமைப் பெண்ணே நீ வாழ்க!
ஆராரிராரோ! என் வீர மகளே உறங்கு!

மாலையிட உனைத்தேடி மன்மதனும் வந்திடுவான்
மஞ்சள் முகமெல்லாம் நாணத்தால் சிவந்திடுமே!
மேளதாளம் முழங்கும்! அங்கே தோரணங்கள் ஜொலிக்கும்!
மாமன்மார் சீரும் அணிவகுத்து வந்து நிற்கும்!

புகுந்தவீடு போற்றிடணும்! குலப்பெருமைக் காத்திடணும்!
கொண்டவனை மதித்திடணும்! குழந்தை ஒன்றைப் பெற்றிடணும்!

தங்கமகனைப் பெற்றுத் தமிழ்த் தாலாட்டுப் பாடு!
முத்து மகனைப் பெற்று முத்தமிழில் நீயும் போற்று!
ஆராரிராரோ! என் செல்ல மகளே உறங்கு!

பெண்ணுக்கொரு உறக்கமில்லை! கண்ணே நீ தெரிந்து கொள்வாய்!
இறுதிவரை இல்லை உறக்கம் இன்று மட்டும் உறங்கிவிடு!
பாடுகளும் அங்கே படை எடுத்துவரும் முன்னே!
துன்பங்ளும் அங்கே உன்னைத் துரத்திவரும் பெண்ணே!
பொறுமையதைக் கொண்டே வாழ்வை வென்றிடணும் நீயே!
மனஉறுதியதைக் கொண்டே வெற்றி பெற்றிடணும் கண்ணே!
ஆராரிராரோ! என் பொன் மகளே உறங்கு!

kalpa2011@gmail.com
பதிவுகள், ஜூன் 2008 இதழ் 102

## 52. அன்னை பூமி! - தமிழினியன் -

பேராசை கொண்ட மாந்தன்
மரங்களை வெட்டினான்
காடுகள் அழிந்து போயின
விலங்குகள் ஊருக்குள்...
பறவைகள் புகலிடம் தேடி
பறந்து திரிகின்றன...
பலஅரிய உயிரினங்கள் இன்று
அழிந்து வருகின்றன...

காற்று நஞ்சாகிப் போனது
அறிவியல் வளர்ச்சியால் !
ஓசோனில் ஓட்டை விழுந்தது
நச்சுப் புகை சுழற்சியால்
நிலநடுக்கம்,சுனாமி,காட்டுத்தீ
காரணமென்ன தெரியுமா ?
தன்னலம் கொண்ட மாந்தனின்
தவறுதானென்று புரியுமா !

நாளைய தலைமுறை பற்றிய
கவலை கொள்...
அவர்கள் வாழ்ந்திட சூழலை
விட்டுச் செல்...
இன்றுநான் நாளை நீ மண்ணுக்குள்
என்பதை புரிந்துகொள்...
என்றும் அழியாதது பூமிதான்
தெரிந்துகொள்...

உயிர்கள் வாழ வளியை
கொடுக்கும் பூமி
அணுகுண்டு ஏவுகணைகளின் வலியை
தாங்கிடும் பூமி
பல்லாயிரம் உயிர் இனங்களை
கண்டதிந்த பூமி
பல கோடி ஆண்டுகள்
வாழுமிந்த பூமி...

senthamilinian@yahoo.com
பதிவுகள், மே 2008 இதழ் 101

## (53 - 62) வ.ந.கிரிதரனின் கவிதைகள்

### 53. மீறிப் பார்! - வ.ந.கிரிதரன் -

உனது பரிமாணங்கள்தாமெத்தனை சிறியவை.
அதற்குள் வளைய வந்து கொண்டா
இத்தனை ஆட்டமும், பாட்டமும் ?
முடிந்தால், மீறிட முடிந்தால்
முயன்று பார்!
மீறுதலென்பது அவ்வளவு தப்பான
காரியமல்லவென்பதை மட்டுமல்ல
மீறுதலென்பது வளர்ச்சியினொரு
படிதானென்பதை மட்டுமல்ல
ஏன்
மீறுதலென்பதவ்வளவு
இலகுவானதல்லவென்பதையும் கூட
மேலும் நீ புரிந்து கொள்ளலாம்.
அதற்காகவாவது
மீறிப் பார்!

## 54.. நவீன விக்கிரமாதித்தனின் 'காலம்' -வ.நகிரிதரன் -

உள்ளிருந்து எள்ளி நகைத்தது யார்?
ஒவ்வொரு முறையும் இவ்விதம்
நகைப்பதே உன் தொழிலாயிற்று.
விரிவெளியில் படர்ந்து கிடக்குமுன்
நகைப்போ , நீ விளைவிக்கும் கோலங்களோ,
அல்லது உன் தந்திரம் மிக்க
கதையளப்போ எனக்கொன்றும் புதியதல்லவே.

இரவுவானின் அடுக்குகளில்
உனது சாகசம் மிக்க
நகைப்பினை உற்றுப் பார்த்திடும்
ஒவ்வொரு இரவிலும்,
நட்சத்திரச் சுடர்களில்,
அவற்றின் வலிமையில்
உன்னை உணர்கின்றேன்.

எப்பொழுதுமே இறுதி வெற்றி
உனக்குத்தான்.
எப்பொழுதுமே உன்காட்டில்
மழைதான். அதற்காக
மனந்தளர்வதென் பண்பல்ல. ஆயின்
உன்னை வெற்றி கொள்ளுதலுமென்
பேரவாவன்று.பின்
உனைப் புரிதல்தான்.

ஓரெல்லையினை
ஒளிச்சுடருனக்குத்
தந்துவிடும் பொருளறிந்த
எனக்கு
அவ்வெல்லையினை மீறிடும்
ஆற்றலும், பக்குவமும்
உண்டு; புரியுமா?

வெளியும், கதியும், ஈர்ப்பும்
உன்னை, உன் இருப்பினை
நிர்ணயித்து விடுகையில்
சுயாதீனத்துடன்
பீற்றித் திரிவதாக உணரும்
உன் சுயாதீனமற்ற,

இறுமாப்புக்கு
அர்த்தமேதுமுண்டா?

இடம், வலம் , மேல், கீழ்.
இருதிசை, நோக்கு கொண்ட
பரிமாணங்களில் இதுவரையில்
நீ
ஒருதிசையினைத் தானே காட்டி
புதிருடன் விளங்குகின்றாய்?
உன் புதிரவிழ்த்துன்
மறுபக்கத்தைக் காட்டுதலெப்போ?

இரவி , இச் சுடர் இவையெலாம்
ஓய்வாயிருத்தலுண்டோ? பின்
நான் மட்டுமேன்?

நீ எத்தனை முறை தான்
உள்ளிருந்து
எள்ளி நகைத்தாலும்
மீண்டும் மீண்டும்
முயன்று கொண்டேயிருப்பேன்.
நீ
போடும் புதிர்களுக்கு
விளக்கம் காணுதற்கு
முயன்று கொண்டேயிருப்பேன்.

வேதாளங்களின் உள்ளிருந்து
எள்ளி நகைத்தல் கண்டும்
முயற்சியில்
முற்றுந் தளராதவன் விக்கிரமாதித்தன்
மட்டும்தானா?

## 55.. சுடர்ப் பெண்கள் சொல்லும் இரகசியம். வ.ந.கிரிதரன் -

இருண்ட அடிவானை நோக்குவீர்.
ஆங்கு
இலங்கிடும் சுடர்பெண்கள்
சொல்லிடும்
இரகசியம் தானென்ன ?
புரிந்ததா ?
சூன்யத்தைத் துளைத்து
வருமொளிக் கதிர்கள்.
'அஞ்சுதலற்ற கதிர்கள்.
அட! அண்டத்தே யார்க்கும்
அஞ்சுவமோ ?
ஓராயிரம் கோடி கோடியாண்டுகள்
ஓடியே வந்தோம்.
வருகின்றோம்.வருவோம்.
காலப் பரிமாணங்களை
வெளியினில்
காவியே வந்தோம்.சூன்யங்கள்
கண்டு சிறிதேனும்
துவண்டுதான் போனோமோ ?
அஞ்சுதலற்ற நெஞ்சினர்
எம்முன்னே மிஞ்சி நிற்பவர்
தானெவருமுண்டோ ?
தெரிந்ததா ? விளக்கம்
புரிந்ததா ? '
நோக்குங்கள்! நோக்குங்கள்!
நோக்கம் தான்
தெரிந்ததுவோ ? சுடர்ப்
பெண்கள் பகரும்
இரகசியம் தான்
புரிந்ததுவோ ?

## 56.. கதி கூடின் கதி கூடும் காலமே! அ'கதி'க் காலமே! - வ.ந.கிரிதரன் -

காலத்தின் விரைவு சிந்தனையை
நெருடும். அன்று அவ்வளவு மெதுவாகச்
சென்ற காலமாயிது!
பாடசாலை விட்டு வரும் வழியில்
எஞ்சினியர் வீட்டு வளவில் திருட்டுத் தனமாக
'விலாட் 'மாம்பழம் பறித்துண்ட போது,
வயற்புறக் குளத்தில் விரால்
பிடிக்க அலைந்த போது,
முருங்கையில் மரங்கொத்தி கண்டு
முதற் கதை படைத்த போது,
உடும்பு தேடி 'ஜிம்மியுடன் '
காடுமேடென்று ஊர்ந்த போது
எத்துணை மெதுவாகச் சென்றதிந்தக்
காலம்.

'டியூசன் ' முடிந்து அவள் கடைக்கண்
பார்வைக்காய் வீதிக் கோடியில்
காத்து நின்ற போது கூட
இவ்வளவு விரைவாகச் செல்லவில்லையே
இந்தக் காலம்.

பின்னொரு நாள் நடுநிசி நிலவே
துணையாக நண்பருடன்
பொருள்முதல் வாதம் பற்றி
வாதம் புரிந்த போது கூட
காலம் இவ்வளவு கடிதாகச்
சென்றதாயென்ன ? அன்று
சிறைப்பிடிக்கப் பட்ட ஒவ்வொரு கணமும்
பதியப் பட்ட உருவக் கோப்புகளாகி
எந்தன் நிலையான நினைவகத்தில்
இன்னுமிருக்குமளவிற்கு
எத்துணை மெதுவாகச் சென்றதிந்தக்
காலம்.

ஆனால்..இன்று.. ?

காலமே! உன் கடுகதிப் பயணத்தின்
காரணம் யாதோ ?

வேகம் கூடுமெனின், சார்பு நிலையில்
உன் வேகம் கூடக் குறைந்து விடுமென்று
தத்துவம் சொல்லிடுதே. ஆனால் நாடற்றவிந்த
அகதி வாழ்வின் வேகம் கூடியதன்றோ ?யார் சொன்னது
குறைந்ததென்று ? கடுகதியாய் விரையுமிவ்
வாழ்வில் காலமே நீயுமேன் கடுகதியில்
விரைகின்றாய் ?அன்று ஆடி அசைந்து
ஆறுதலாகச் சென்றவென் வாழ்வில் நீயுமேன்
ஆறுதலாகவாடிச் சென்றாய் ?காலமே!
கதி கூடின் காலந்தனின் கதி
குறையுமென்ற ஐன்ஸ்டைனின்
கூற்றும் பொய்யோ ?என்
கதி கூடின் கதி கூடும்

காலமே சொல். 'அ'கதி'யிருப்பில்
கதியிருப்பதால் கதிகூடும் உன்னைப்
போல் நானுமொரு அ'கதி'யே! வெளிகளிற்குள்
திக்கிழந்ததொரு அகதி நான்.

அதனாலென் கதியும் உன் கதியாச்சு.

கதி கூடிப் போச்சு. பாவம். ஐன்ஸ்டன். அவன்
கதி இவ்விதமாச்சே! கதி கூடின் 'காலம் '
கதி குறையுமென்ற மூடனவன்
காலத்தின் கோலம் முற்றுமறியாத
யானை பார்த்த குருடன் '
என்கின்றாயா காலமே! காலமே!
இன்று நான் உந்தன்
இருப்பறிந்தேன். உந்தன் கதியறிந்தேன்.

'கதி'யற்ற அ'கதி'க்குக் 'கதி'யற்ற
காலமும் துணையென்றுணர்ந்தேன்.
காலமே! போற்றி! போற்றி!

## 57. மின் பின்னியதொரு பின்னலா ? - வ.ந.கிரிதரன் -

உண்மையென்று ஏதேனுமொன்றுண்டா ?
நான் பார்ப்பது, நீ இருப்பது
இதுவெல்லாம்
உண்மையென்று
எவ்விதம் நான் நம்புவது ?
நீயே சொல்.
நீ சொல்கின்றாய்
நீ இருக்கிறாயென்று.
உண்மையாக நீ இருக்கின்றாயென்று.
என்னை விட்டுத் தனியாக
எப்பொழுதுமே
இருப்பதாக நீ கூறுகின்றாய்.
எவ்விதம் நம்புவது.
ஆயிரம் மில்லியன் ஒளிவருடங்களிற்கு
அப்பாலிருந்து இருந்து வரும்
ஒளிக்கதிர்களுக்கும்
உன்னிலிருந்து வரும் ஒளிக்கதிர்களுக்கும்
இடையிலென்ன வித்தியாசம் ?
நேரத்தினைத் தவிர.
உனக்கும்
எனக்குமிடையில்
எப்பொழுதுமே ஒரு தூரம்
இருக்கத் தானே
செய்கிறது. அது
எவ்வளவுதான் சிறியதாக
இருந்த போதிலும்.
எப்பொழுதுமே ஒரு நேரம்
இருக்கத் தானே செய்கிறது
கணத்தினொரு சிறுபகுதியாக
என்றாலும்.
நீ இருப்பதாக
நீ சொல்லுவதைக் கூட
நான் அறிவதற்கும் புரிவதற்கும்
எப்பொழுதுமே இங்கு
நேரமுண்டு. தூரமுமுண்டு கண்ணே!
காண்பதெதுவென்றாலும்
கண்ணே! அதனை
அப்பொழுதே காண்பதற்கு
வழியென்றுண்டா ?

காலத்தைக் கடந்தாலன்றி
ஞாலத்தில் அது
நம்மால முடியாதன்றோ ?
தூரமென்று ஒன்று உள்ளவரை
நேரமொன்று இங்கு
இருந்து தானே தீரும் ?
அது எவ்வளவுதான்
சிறியதாக இருந்த போதும்.
வெளிக்குள்
காலத்திற்குள்
கட்டுண்டதொரு இருப்பு
நம் இருப்பு கண்ணம்மா1
காலத்தினொரு கூறாய்
உன்னை நான் காண்பதெல்லாம் இங்கு
உன்னை நான் அறிவதெல்லாம்
மின்னலே!
மின் பின்னியதொரு
பின்னலா ? உன்னிருப்பும்
இங்கு
மின் பின்னியதொரு
பின்னலா ? என் கண்ணே!

## 58.. தாயே! என்னிருப்பில் உன்னிருப்பறிந்தேன்! - வ.ந.கிரிதரன் -

உன்னிருப்பாலிருப்பின் மறுப்புதனை
உணர்த்தியெங்கு சென்றாய் ? தாயே!
எங்கு சென்றாய் ?
நினைவுக்கோளத்தினொரு சித்த
விளையாட்டாய் இருந்து நீ
சென்றதெல்லாம் அன்னையே! என்
எண்ணப் பறவைகளின் வெறும்
சிறகடிப்போ ? இருந்தவிருப்பை
இதுவரை நான் இவ்விதம்
உணர்ந்தேனா ? இருப்புணர்ந்து
புரிவதற்கு உன்னிருப்பேயொரு
காரணியாயமைந்த விந்தையென்னே!
உன்னிழல் தொடர்ந்து வரும்
குஞ்சுகளாய் வருமெமையரவணைத்தாய்.
காத்து நின்றாய். உணர்வெல்லாம்
காற்றாக நீ போனதினால் நனவாய்க்
கனவாய் வந்து வந்து மோதும்
செயலென்னே! என்றேனும்
உனைப்பற்றி நீ எண்ணியதுண்டா ? நாம்
நன்றாயிருந்தாலது போதுமென
உன்பணிசெய்து கிடந்தாயே ? தாயே!
உனை நாமெங்கினிக் காண்போமோ ?
இங்கு நீ இருந்ததெல்லாம், இங்கு நீ
நடந்ததெல்லாம், இங்கு நாம்
திரிந்ததெல்லாம் இருந்ததொரு
இருப்போ ? விரியும் வினாக்கள்
விடைநாடிச் சிறகடிக்கும் சிட்டுக்களாய்
சித்தவானினிலே.
விடை தெரியா விடைநாடும்
வினாக்கள் பல சுமந்து
ஒட்டகமாயிப் பாலையிலே
காலையும் மாலையுமாய்
பயணமின்னும் தொடருமோ ?
பயணத்தின் ஒளித்
தெறிப்பெல்லாம் கானற் காட்சியாய்
கடந்ததுவோ ? பாலையும் கானலோ ?
இப்பயணமும் கானலோ ?
இங்கு இப் பயணமும்
கானலோ ?

நெஞ்சிலுரமூட்டியெமை வளர்த்தாய் தாயே!
அஞ்சிடாதுளம் தந்தெமை வார்த்தாய்.
நீ இருந்ததெல்லாம் தாயே! வெறும் நிழலா ?
நீ இருந்ததெல்லாம் தாயே! வெறுங் கனவா ?
உன்னிருப்புமென்னிருப்பால் விளைந்ததொரு
பொய்யானதொரு மெய்யோ ? தாயே!
பொய்யானதொரு மெய்யோ ?
உனது சொல்லும் செயலும்
உணர்வும் பரிவும்
பரவிக்கிடக்கும் வெளிக்குள்
வெளியாய் பரவிக் கலந்தாய்.
மீண்டுமொருமுறை
'நான் ' 'ஏன் ' 'யார் ' என
ஆய்ந்திட வைத்துச் சென்றாய் ? தாயே!
ஆயினுன் உயிரின் உறவின்
உதிரத் துளியாய் இன்னுமிங்கே
இருக்குமென் இருப்பில் நான்
உனைக் கண்டு தெளிவேன். அதனால்
உனைப் புரிந்தேனிந்த
உலகை அறிந்தேன். ஏன்
எனையும் தெரிந்தேன். என்
இருப்பில் இருந்தஉன்
இருப்பின் பொருள் உணர்ந்தேன்.
தாயே! பொருள் கண்டேன்.

- அன்னையார் மறைந்தபோது எழுதியது. -

## 59. அலைகளுக்கு மத்தியில் அலையென அலைதல்! - வ.ந.கிரிதரன் -

நீர்த்துப் போன அலைகளும்,
வீர்யம் நிறைந்தவையுமாக,
மிகச்சாதாரணமான ஒலி அலைகள் தொடக்கம்
மின்காந்த அலைகள், வானொலி அலைகளென
(காமா, அகச்சிவப்பு, புற ஊதா, X-கதிரெனப் பலப்பல)
அலைகளால் நிறைந்து கிடைக்கின்றதிந்தப்
பிரபஞ்சத்துப் பெருவாவி.

பரந்து, பொசிந்து, வியாபித்துக் கிடக்குமிந்த
அலைகளில் இருக்கிறது இந்தப் பிரபஞ்சத்தின்
இது நாள் வரையிலான வரலாறு.

வரலாறென்றால் எனக்கு மிகவும்
பிடித்தமானதொரு துறை.

வரலாற்றினை ஆய்வு செய்தல்
எப்பொழுதும் சலிப்பினைத்
தருவதில்லை; மாறாக
வியப்பினைத்தான்.

எங்கோவொரு தொலைவிலொரு
ஆத்மா (இருக்கும் பட்சத்தில்
அல்லது உண்மையாகவிருக்கும்
பட்சத்தில்)
இதனூடு காலத்தின் பரிணாம வளர்ச்சியினை
அல்லது இந்த அண்டவெளியின்
இதுவரையிலான அன்றாட நடப்புகளை,
போர்களை, உணர்ச்சி வெடிப்புகளை,
துக்கத்தினை, மகிழ்ச்சியினையெல்லாம்
அறிந்து கொள்ளும் பக்குவம்பெற்றிருக்கும்
பக்குவமடைந்திருக்கலாம்;

அதன் மூலம்
வியப்பும், திகைப்பும் அடைந்து கொண்டிருக்கலாம்
இங்கு நான், இப்பொழுது, இக்கணத்தில்
அடைந்து கொண்டிருப்பதைப் போல.

வியப்பாக இருக்கிறது அலைகளின்
ஆற்றலை எண்ணுகையில்.

அலைகளின் வேகம் பற்றித்தான்
இதுவரையில் பிரமித்திருந்தேன். ஆனால்
இப்பொழுதுதான் அவற்றின்
மறுபக்கத்தின் மகி¨யெனை
பிரமிப்பிலாழ்த்திக் கொண்டிருக்கின்றது..

இந்த வகையிலவை வெறும்
வரலாற்றுச் சுவடுகள் மட்டுமல்ல.

காலத்திரையினில் விரிந்திடுமவற்றின்
விசும்புக் காட்சிகள் தொடர்ந்தும்
வியப்பினையே தருகின்றன.

அலைகள்தானெத்தனை வியப்பானவை;
புதிரானவை.

அலைகளுக்குள் ஆடுமென்னிருப்பும்
வியந்தபடி, அறிய முனைந்தபடி
ஆடிடும்
இன்னுமொரு அலையென
அலைந்தபடி.

## 60. . விண்ணும் மண்ணும்! - வ.ந.கிரிதரன் -

விரிந்து கிடக்குமிந்த விசும்பு
ஓர் உளவியல் நிபுணரைப் போல்
பலருக்கு அறிவுரை பகரும் அதிசயத்தினைப்
பார்த்து ஒவ்வொரு முறையும்
அதிசயித்துப் போகின்றேன்.

'வானத்தைப் போல்.....'
அப்பொழுதெல்லாம் இவ்விதம் நான்
எனக்குள்ளேயே அடிக்கடி கூறிக்
கொள்வதில் ஒரு வித மகிழ்ச்சியில்
பூரித்துப் போகின்றேன்.

இவ்விதமான வேளைகளில் ஒரு மாபெரும்
நூலகத்தினைப் போல் இந்த வானம்
எவ்வளவு விடயங்களைத் தன்னுள்
தாங்கி வைத்திருக்கின்றதென்பதை
உணர்ந்து கொள்கின்றேன்.
கற்பதற்கெவ்வளவு உள.
கற்பதற்கெவ்வளவு உள.
காலவெளி நூலகத்தில்தான்
கற்பதற்கெவ்வளவு உள.

அளவுகளுக்குள்ளிருந்து
ஆகாயம் பார்க்கும் மண்பார்த்து
அப்பொழுதெல்லாம் இந்தவான்
தனக்குள் நகைத்துக் கொள்ளுமோ!

அப்பொழுதெல்லாம் கீழ்க்கண்டவாறு
நினைத்துக் கொள்வேன்:
'படைகளுக்குள்ளோரிருப்பு! மேலும்
படையெடுப்பெதற்கு?'

ஆகாயத்தின் இயல்புகளில் சில:
அகலம்! விரிவு!
அவை கூறும் பொருளெம்
அகம் உணர்தல் சாத்தியமா?
'அகத்தின் விரிவில், அகலத்தில்
மண்ணிலின்பம்! அட மானுடரே!'

தன்னியல்பினுள் விடைபொத்தி வைத்திருக்கும்
விசும்பு மண்ணின் கேள்விகள்
அனைத்துக்கும்.
விண்ணிலிருந்து மண்
கற்பதற்கு நிறைய உள.
கற்பதற்கு நிறைய உள.

## 61. ஐன்ஸ்டைனும் நானும் (ஒரு பிதற்றல்)! - வ.ந.கிரிதரன் -

நானொரு பைத்தியமாம். சிலர்
நவில்கின்றார். நானொரு கிறுக்கனாம்.
நான் சொல்வதெல்லாம் வெறுமுளறலாம்; பிதற்றலாம்.
நவில்கின்றார். நவில்கின்றார்.
ஏனென்று கேட்பீரா? நான் சொல்வேன். அட
ஏனெழுந்தீர்? நீருமெனை நினைத்தோரோ 'கிறுக்கனென'.
ஆதிமானுடத்திலிருந்தின்றைய மானுடம்' வரையில்
வரலாறுதனை
அறிந்திடப் போகின்றேன் அப்படியே அச்சொட்டெனவே
என்றதற்கியம்புகின்றார் எள்ளி நகைக்கின்றார் இவரெலாம்.
நான் சொன்னதெல்லாம் இதுதான். இதுதான். இதுதான்:
'நுண்ணியதில் நுண்ணியதாய், மிக நுண்ணியதாயுளவற்றினை
நோக்கிடும் வலுவிலொரு தொலைகாட்டி சமைத்து
ஒளி விஞ்சிச் சென்றுவிடின்
ஆதிமானுடத்தினொளிதனையே
அட நான் முந்திட மாட்டேனா என்ன. பின்
வரலாறுதனை அறிந்திட மாட்டேனாவொரு
திரைப்படமெனவே'. என்றதற்குத்தான் சொல்லுகின்றார்
கிறுக்கனாமவை உளறலாம்; பிதற்றலாம்.
'ஒளி வேகத்தில் செல்வதென்றாலக்கணத்தில்
நீரில்லையும் உடலில்லை. நீளமெலாம் பூச்சியமே.
நான் சொல்லவில்லை. நம்ம ஐன்ஸ்டைன் சொல்லுகின்றார்'
என்றே
நவில்கின்றார்; நகைக்கின்றார் 'நானொரு கிறுக்கனாம்'.
நியூட்டன் சொன்னதிற்கே இந்தக் கதியென்றால்
நாளை ஐன்ஸ்டைன் சொன்னதிற்கும் மாற்றம் நிகழ்ந்திடாதோ?
அட நான் சொல்வேன் கேட்பீர். நானுமிப் பிரபஞ்சந்தனையே
சுற்றிச் சுற்றி வருவேனென்றன் விண்கலத்திலவ்வேளை
செகத்தினிலிவ் வாழ்வுதனின் அர்த்தம்தனைச்
செப்பிவைப்பேன்.
நல்லதிவையெலாம் கிறுக்கல், பிதற்றல், உளறலென்பவரெல்லாம்
நவின்றிடட்டுமவ்வாறே. அதுபற்றியெனக்கென்ன கவலை.
எனக்கென்ன கவலையென்பேன்.

- மார்ச் 6, 1983.-

## 62. நகரத்து மனிதனின் புலம்பல்! - வ.ந.கிரிதரன் -

மரங்களிலிருந்து 'காங்ரீட்' மரங்களிற்கு...
குரங்கிலிருந்து மனிதனிற்கு...
ஆதிமானுடத்திலிருந்து அதியுயர் மானுடத்திற்கு...
பரிணாம நிகழ்வு, வளர்ச்சி
என்கின்றது
முந்தாநாள் சந்திரனில் கால் பதித்தவனின்
சுற்றம்.
இதற்கொரு விளக்கம் வேறு...
ஒளியையுறுஞ்சுதலென்பது இவ்விரு
விருட்சங்களிற்கும் பொதுவான செயலென்று
கருத்தியல் வேறு.
உறுஞ்சுதலிலொன்றெனினுமிவை
உம்மைப்போல் விருட்சத்தோழரே!
உணவைப் படைப்பதில்லையே?
உயிரையெமக்குத் தருவதில்லையே?
தோழரே! நீரோ மேலும்
நிழலைத்தந்தீர்! உமது
காயைத்தந்தீர்! கனியைத்தந்தீர்.!
இலையைத்தந்தீர்!
இறுதிலும்மையே தந்தீர்!
ஆனால்.......
நவீன விருட்சங்களிவை
தருவதென்ன?
'நன்றி மறத்தல்' நம்மியல்பன்றோ?
நன்றியை மறந்தோம்.
நண்பருனது தொண்டினையிகழ்ந்தோம்.
இதனால்
இன்றெமக்கு
இரவு வானத்துச் சுடரையும்
நிலவுப்பெண்ணின் எழிலையும்
பாடும் புள்ளையும்
இரசிக்கும்
உரிமை கூட
மறுதலிக்கப் பட்டு விட்டது.
உம்மையிழந்ததினால்
இந்த மண்ணும்
உலர்ந்து போனது.
'எரியுண்ட தேச'மென்பதாக
இன்று

எமது கிரகமும்
'எரியுண்ட கிரகம்'
என்பதாச்சு.

பதிவுகள், ஆகஸ்ட் 2008 இதழ் 104 -

## 63. ஒரு முனை முறிந்த ஓசை - நவஜோதி ஜோகரட்னம் (லண்டன்) -

காலத்தின் சுழற்சியை
கலைப் புரிதலை
ஆளுமையாக்கியவரே!...
அஞ்சா நெஞ்சினனாய்
அஞ்ஞானத்தை விழுங்கி
கரங்கள் நீண்டு
நட்புகளை அரவணைத்த
ஆசானே!
மூளைத் திசுக்களுக்கு
புத்துணர்வூட்டிய
உயிர்க்காற்றே!... ஏ.ஜே.
கனகரட்னாவே! எம்
இதயக் கிணற்றில்
இன்பமாய் ஊறுகின்றாய்...

வர்ணிக்கவும்
வழிகாட்டவும்
வெம்மையிலும்
குளிர் தரும் நிழலாகி
எம்மிதயங்களில்
குடிகொண்டவரே!
குடியோடும் குலாவியது
எப்படியோ?...

உன் எளிமை...
மாடியையும்
மறைந்த வெளிகளையும்
மாக்ஸியத்தால்
மயக்கியவரே...
புகழ் வெளியை
விலத்தி
புதுப் புது விடயங்களை
புலமைப்படுத்தியவரே...

இன்று
இலக்கியத்திலிருந்து
முனை முறிந்த ஓசை ஒன்று
தமிழ்
உலகமெங்கும் கேட்கிறதே...!

## 64. மெளன மோதல்! - நவஜோதி ஜோகரட்னம் - .

பிரபஞ்ச நிகழ்வுகள்
எல்லாமே
எஞ்சிய
சந்தேகங்களை சுமந்தபடி…
பயனற்ற உணர்வுகள்
பிசகாமல்
படிவங்களாகி
ஊடுருவியபடி…

மெளன இடைவெளிகள்
இயல்பாக நகருகையில்
ஞாபகங்கள்
மர்ம வழிகளில்
மோதுவதும் மறைவதுமாய்
மனிதவாழ்க்கை…

அவசியமற்ற
ஆயிரம்
அற்ப நினைவுகள்
அலுத்து அகலும்போது
அன்று நீ சொன்னதெல்லாம்
உண்மையென நம்பியவை
மின்சாரக் கம்பத்துடன்
மோதி மறைகிறது…

துன்பங்களை வர்ணிக்கும்
ஆத்மாவில்
சிறு துகளொன்றை
இந்த நிமிஷமே
நீ உணரத் தருவேன்
முழு உண்மையை
முற்று முரணாக
அடிக்கடி நீ
மாற்றாமல் இருந்தால்…
நிஜமான ஒரு
நம்பக மனிதனாய்
இதயத் துளிர்களில்
நீ பூத்தால்………

- navajothybaylon@hotmail.co.uk பதிவுகள், டிசம்பர் 2006 இதழ் 84

## 65. ஏ.ஜே. என்ற ஆளுமைமிக்க ஆகிருதி! - மேமன்கவி -

அண்மையில் மறைந்த ஏ.ஜே.கனகரட்னா
ஆளுமைமிக்க ஆகிருதி
ஒன்றின் மரணம் தரும்
மௌனம்-
அது அதன்
உடலின் நிரந்தர உறக்கம்
அதுவே விழிப்பாகி....
விரிந்த மேசையின் பரப்பில்
ஒடுங்கிய புத்தக அடுக்குகளில்
இணைய உலாவிகளின் முடக்கங்களில்
உரத்துப் பேசத் தொடங்கும் தருணமிது!
"எதற்குமே உரிமைக் கோராத
ஞானம்" பெற்ற
ஆகிருதியின் ஆக்கங்களுக்கே
அது சாத்தியம்.
அதன்-
திறன்களின் மீது
பாய்ச்சப்படும் வெளிச்சம் தரும்
புலர்வு
அருகே இருந்த மூளைகளில்....
பேசும் வார்த்தைகள் மௌனமாகிப் போக-
எழுதிய வார்த்தைகள் போல்
வாழ்ந்து போன வாழ்வு
அந்த புலரவின் பிரகாசத்தில்
உரத்து வாசிக்கப்படும்.
"ஏ.ஜே" எனும்
மறையாத ஆளுமைமிக்க
ஆகிருதியும்
அதுவான ஒன்றுதான்!

memonkavi@yahoo.com
பதிவுகள், டிசம்பர் 2006 இதழ் 84

## 66. எனது கவிதைகளுக்காக ஓர் இருப்பிடம் தேடி... - வீ.அ.மணிமொழி, மலேசியா -

நான்
நேற்று...இன்று...
சேமித்து வைத்த கால்கள்
என்னை அறியாமலே
விட்டு விலகிச் சென்றன
புன்னகையுடன்...
* * *

எனக்கான இருப்பிடத்தைத் தேடுகிறேன்
கண்களையும் கால்களையும்
கட்டிக்கொண்டு...
மயான வீதியை நோக்கி...
* * *

ஒளித்து வைத்திருந்த
தனிமை...
தலையை நீட்டி
என்னிடம் பேசிக் கொண்டிருக்கிறது
எனக்கான மொழியில்...
* * *

இனி பார்ப்பதற்கு ஒன்றுமில்லை
எல்லாம்...
நான் சேமித்த ரகசியங்கள்.
மே 2007 இதழ் 89

## 67. ஒரு கணம்! - வீ.அ.மணிமொழி, மலேசியா -

இருள்...
மீண்டும் இருள்...
சுற்றிச் சூழ்ந்து கொண்டது

தடித்த வேர்களும்
முள் படர்ந்த விழுதுகளும்
உடலை நெறித்து
முறுக்குகின்றன
வடுக்கள் பதிக்காமலே...

மௌனங்கள் நிரம்பிய
நிஜமில்லா
அதன் மென்மை
என் இரகசியங்களை
பொறுக்கிக் கொண்டு
செல்கின்றது...
திரும்பி பார்க்காமலே...

moli143@yahoo.com
மே 2007 இதழ் 89

## 68. உறவென்று........ - றஞ்சினி -

அன்னை மடியில்
உறைந்துகிடக்கிறது
மனம்
அழுதழுது எதுவுமே ஆகிவிடவில்லை
உறவை இழந்த உயிர் துடிக்கிறது
ஒருசில கணங்கள்
கடந்தவை கேள்வியாகி
வாழ்வு ஸ்தம்பிக்கிறது
நிஜமென்று நினைப்பவை
உறவென்று அழுபவை
உயிருடன் இருக்கும் வரைதான்.

shanranjini@yahoo.com
மே 2007 இதழ் 89

## *69. புலம் பெயர்ந்த ஈழத்தமிழன்! - திருநாவுக்கரசன், மதுரை -*

தோட்டத் தொழில்செய்தோம்
தோட்டாக்கள் துளைத்தன எங்களை
வயதொத்த தோழர்களும்
வாழ்க்கைப்பட்ட மனைவியும்
வதைபட்டு இறந்ததை
வாங்கிய கண்கள்
தூங்கவில்லை இன்னும்.....
வீடுகள் இழந்தோம்
வீதிக்கு வந்தோம்
வீதியும் இழந்தோம்
வேற்று தேசம் வந்தோம்
வாழவேண்டும் என்று எண்ணி
ஈழம்விட்டு இங்கு வந்தோம்
ஈனப்பட்டு நிற்கின்றோம்.
உடல் அலுக்க உழைத்தபின்தான்
குடல் நிறைத்துக் கொள்வது
கொள்கை எங்களுக்கு - இப்படி
கொடுப்பதை உண்டு படுத்துக் கிடக்க
கொடும்பாவம் என்ன செய்தோம்
அன்னை பூமியில் வாழ்விழந்தோம்
அன்னிய பூமியில் மதிப்பிழந்தோம்
போதும் நிறுத்துங்கள் போரை - நான்
அன்னை பூமியின் மண்ணைத் தழுவி
ஆனந்தக் கண்ணீர் விடவேண்டும்.
தொலைந்துவிட்டதைத் தேடலாம்
தொலையாத சமாதானத்தைத் தேடுவதேன்!
சமாதான நதி சத்தமில்லாமல் ஓடுகிறது
அள்ளிப் பருகவேண்டும் - சற்று
அதை நோக்கி வாருங்கள்
இறங்கி.....
வாழ்க்கையின் கதவுகள் மிகப் பெரிது
சமாதானச் சாவி சிறிதென்றாலும்
அது திறக்கும்

அனுப்பியவர்: kalpa2011@yahoo.com
மே 2007 இதழ் 89

## 70. தாய்! - கவி வைஸ்ணவி -

உணர்வுடன்
இன்பத்தையள்ளி
உதிரத்தில் பிசைந்து
தன்
கருவினில் இருத்தி
உயிரினைத் தந்தவள்
தாய்...!

சதைப்பிண்டமாயிருந்த
உயிரை...
பத்து திங்களில்
குழந்தையாய் உயிர்ப்பித்து
தந்தவள் தாய்...!

பசியென்றவுடன்
உணவாகி... உண்மை
அன்புக்கு முன்
விலையாகி உதிரம் தந்த
உலகின் தெய்வம் தாய்...!

பெண்ணில் உயர்தரம்
கண்ணையிமை போல்
உன்னைக் காத்தவள் தாய்..!

அவள் கருவிலிருந்து
நீ... எத்தனை தடவை
எட்டியுதைத்திருப்பாய்
எண்ணிப்பார்?

எட்டியுதைந்தாலும்
"வலியைத் தனதாக்கி
உன்னையுருவாக்கியவள்
தாய்...!
அனாதை மடத்திலே...
தவிக்க விடலாமோ?"

நீ. தவிக்க விட்டாலும்
நீ.. தவிக்கின்றாயோவென்று
உன்னையே

நினைத்தேங்கிடும் அன்னை
தான் தாய்!

sakthy-@hotmail.com
மே 2007 இதழ் 89

## 71. இலங்கையிலே...! - மட்டுவில் ஞானக்குமாரன் (யேர்மனி) -

இதயம் வறண்டு
நீறாக உதிர்ந்து போகிறது
எந்த நிமிடத்திலோ
உயிர்கிள்ளக்கூடும்

மெது மெதுவாக
மூச்சுக்குழல்
அசைவை நிறுத்தும்

சொல்லிட
நினைக்கும் வார்த்தைளை
விழுங்கி விழுங்கியே பழகிவிட்டது.

மண்ணிலே
கால் பதிக்க முன்னமே
கரைந்து போன கர்ப்பம் போல
உள்ளுக்குள்ளேயே
உருகிப் போகிறது எண்ணங்கள்.

வெளிக்காற்று
ஆகாயம் எல்லாமே
காசு கொடுத்து
வாங்கும் அபுர்வ பொருளானது
சிறைக்கைதி எனக்கு

அதிகாலை பொழுதிலே
வீதியோரங்களிலே
தமிழரின் உடல் துண்டங்களால்
கோலம் போடப்பட்டிருக்கும்

பிணங்களைத் தோண்டி எடுத்து
ஆய்வு செய்திட
பாண்டித்தியம் பெற்ற யாராவது
வருவார்கள்

எந்த முடிவு வந்தென்ன
இழந்து போன
உறவுகள் எழுந்திடாதவரை ...!

-maduvilan@hotmail.com *மே 2007 இதழ் 89*

## 72. பகல்! - நவஜோதி ஜோகரட்னம், லண்டன் -

தொங்குபாலமான என்னுள்
தொடுவதும் மறைவதுமாய்
நடைபாதைச் சூரியன்
ஒன்றிணைந்த உணர்வில்
அரூபத்தின் தொடுகை
உரசி நிற்கின்ற
சிற்பமாகி
பிதுங்கித் தெரிகிறது
சொர்க்க நிழல்
சூரியனை கொறிக்கின்ற குருவிகள்போல்
குதூகலம்
முடிவில்லா பாட்டுக்கள்போல்
குற்றம் இடைநடுங்கி
ஆன்ம வெருட்சி
ரம்மிய வெளிச்சம்
இதமான இளவெயில்
இலைகளின் போர்வைக்குள்
ஆக்கிரமிக்கிறது என் பகல்

navajothybaylon@hotmail.co.uk
மே 2007 இதழ் 89

## 73. வானம்! - என் சுரேஷ்-

என்னடா என் தலையில் இத்தனை பாரம் ?
ஏந்த முடியா என்னில் ஏனோ - இத்தனை
ஏளனம் ஏக்கம் ஏமாற்றம் ஏகாந்தம் ???

தேடித்தேடி பார்த்தேன்
மனதினோரம் கவலையென்று ஒன்றுமில்லை

பிறகு
மனதின் கிரீடத்தில் மட்டும் ஏனிந்த பாரம்

மனமே,
என்ன வேண்டுமுனக்கு ?

அழ வேண்டுமா ?
காதலியை காண வேண்டுமா ?
உறங்க வேண்டுமா ?
உறக்கத்தில் கனவு வேண்டுமா ?

எது வேண்டுமென்றாலும்
எதுவும் உனதல்ல

அட !

நீ கண்ட உன் கனவே
உனக்கு சொந்தமில்லையடா

இதயத்தில் கண்ணீர் நிறைந்தும்
அழ முடியாத
மனமே
நீயொரு
வித்தியாச வானம் !

மே 2007 இதழ் 89

## 74. முட்டாள் காதலன்! - என் சுரேஷ்-

பாலைவனத்தில்
வாழைமரம் நட்டதும்
உன்னை
காதலித்தேன்!

வாழைமரம்
தோப்பானதும்
பறந்து வந்ததுந்தன்
திருமணப் பத்திரிகை
அதிலொரு குறிப்பு
"மன்னித்து விடுங்கள்"

என்னை
முட்டாளென்றோ
ஏமாற்றப் பட்டவனென்றோ
முரசடித்துக் கொள்ளலாம்!

இன்னமும்
கனவின் கற்பனையில் வாழ்ந்து
கானல் நீரில் மீன் பிடிக்கும்
சுகத்தில் நான் மகிழ்கிறேன்!

என் பெயர்
முட்டாள் காதலன்!

மே 2007 இதழ் 89

## 75. என்னைப் புரிந்து கொள்! - என் சுரேஷ்-

உன்னையே உனக்கு விளங்காத போது
என்னையே நீ விலக்க முயல்வது
முறையோ சொல்!

தீயில் குளித்தவன் என்னை
எரித்து விட முயலாதே!

என்னை மூழ்கடிக்க
கடல்நீரும் போதாதே!

இமயமலையுமெந்தன் உயரம்
வளரத் துடிக்கிறதே!

ஆணவமல்ல
இதெல்லாம் உண்மையே!

காதலே
இன்னுமா புரியவில்லை?

உந்தன் மனதின்
உள்ளுணர்வில்
என்றுமென்றும்
மகிழ்ந்து வாழ்ந்து மகிழ்வைக்கும்
வசந்தத் தென்றல்
நான்!

மே 2007 இதழ் 89

## 76. உன் மூச்சும் பேச்சும்! - பட்டுக்கோட்டை தமிழ்மதி -

உன்
மூச்சும் பேச்சும்
முடியவில்லை.

உடல்
மண்ணுக்கு என்பார்கள்
ஆனால்
உன் உடலே
உன் மண்தான்.

தாய் மண்ணில்
உன்னினம் படும் வலியினும்
நோயினால்
உன் உடல்படும் வலி
ஒரு
கூழாங்கல் எனச்சொல்லி

நீ
உயிரோடு போராடினாய்
உன்னின
உயிர்களுக்காக போராடினாய்...

போரிலும் சமாதானம்
எழுதினாய்

'விடுதலை கேட்டு
சிறைபட்ட இனம் உனது.

சிறையில் உனக்கு
கைதிகள் எழுதுகிறார்கள்
கண்ணீரஞ்சலி.

உன்
மண்ணில் மக்களும்
கைதிகளாய் எழுதுகிறார்கள்
கண்ணீரில் அஞ்சலி.

உன்
உடல்நோய்க்கு மருந்துதேட

பாதைவிடா மண்ணிலிருந்து
அகதியாய்
கடல் கடந்தேறிதான்
காப்பாற்றிக் கொண்டாய்.

அன்றைக்கு
அனுப்பிவைத்த அந்த
கரையை காண
அப்புறம்
அடிக்கு அடி வந்து நின்றாய்.

உலகெலாம் ஒலித்த
தேசத்தின் குரல்
நீ.

உன்
மண்ணை பேசும்
மண்வாசம் மாறாத பேச்சோடு
ஈழத்து மண்ணாய்
இருக்கிறது உன் உடல்.

உன்
மூச்சும்பேச்சும்
முடியவில்லை.

உன் துணைவி
உன் முகம்தொட்டு கதற
கண்மூடிக் கொண்டிருக்கிறாய்.

உன் கண்மூடலுக்காக
குரலிழந்து
ஒரு நிமிடம்
மௌன அஞ்சலி

மறு நிமிடம்
உன்னினத்தின் உயிர்ப்புக்காக
குரலெழுப்பும்
உன்
குரல் வளை...

thamizhmathi@gmail.com ஜனவரி 2007 இதழ் 85

## 77. மாறியதும் ஏனோ? - நவஜோதி ஜோகரட்னம் (லண்டன்) -

என் உணர்வுகளை வெளிப்படுத்த
மொழி சொல்கின்ற கவிதை
காதலாகிப் பிறப்பதுண்டு
கனவுகள் கூட
கிளிப் பச்சை நிறமாகி
கன்னத்தை இடிப்பதுண்டு

உன்னை காண்பேன் என்று நம்புதல் எனக்கு இயலாது...

வலிகள் வேதனைகள் கொடுமைகள்
காற்றில் மசிந்த மணங்கள்;
குப்பைகள் பரந்த தரையை
உதைத்த மழைத்துளிகள்
என்னுடலில் பட்டு
பெரும் சிலிர்ப்பாகி
மெல்ல மூடி மறைகின்றன
கவிதைத் துண்டுகள் போல
முடிவில்லா பாட்டுக்கள் போல
சிந்தையும் திரும்பத் திரும்ப
துண்டம் துண்டங்களாக...

முகங்களை மெருகேற்றிய
புன் சிரிப்புக்களும்
பூக் காடுகளும்
கண்களை விரித்து
வானத்தைப் பார்த்து
எரிகின்ற நினைவாகி
நெஞ்சுள் சுடுகின்றது
எதை மறப்பது?

துயராகி கரைகின்ற இரவுகள்
வானத்தைத் தொட்ட
உயர்ந்த கிளைகள்
காற்றின் ஒலியில்
ஊசலாடும் ஓவியங்கள்
உடலை இட்டு
மண்ணை மூடி
சமனப்படுத்திக் கொள்ளும் பெண்கள்
அழுகின்ற தாய்மார்கள்

தவழ்ந்து வந்து
புரண்டு வீரிடும் குழந்தைகள்
புலர் காலை ஒலியெல்லாம்
இசைவில்லாத அசைவின்
கோட்டுச் சித்திரமாகி கொல்கிறது..
ஏன் இந்தக் கோலம்? இப்படி
மாறியதும் ஏனோ?...

navajothybaylon@hotmail.co.uk
பெப்ருவரி 2007 இதழ் 86 -

## 78. பொங்கலோ பொங்கல்! - வைகைச் செல்வி -

தத்தை மொழி பேசிப் பறந்த பிஞ்சுக் குழந்தைங்க
கொத்துக் கொத்தாய் நோய்டாவிலே கூடாப் போனபின்
எக்கணமும் கண்ணீரோடு அலைஞ்சு திரிகையில்
சக்கரையும் பொங்கலுமா திங்க முடியுங்க?

காந்தி மகான் புத்தரும்தான் பொறந்து வந்தாங்க
சாந்தி வேணும் என்றுதானே சொல்லிப் போனாங்க
சுருங்கிப்போன மனுசனுக்கு இதயமில்லீங்க
கரும்புச்சாறு கரிக்குதுங்க பொங்கலன்னிக்கு.

செத்துப்போன மாடுரிச்சா அவனக் கொல்லவும்
மொத்தசனம் ஏறிவந்த ரயில எரிக்கவும்
சங்கம் வைத்து சாதி மதம் வளர்க்கும் ஒலகிலே
பொங்கப்பான மட்டும்தானா பொங்கி வழியுது?

vaigai_anne@yahoo.com

பெப்ருவரி 2007 இதழ் 86

## 79. நகர்வலம்! - தநுசு (ஜப்பான்)-

கடந்த சில வருடங்களாய்...

அலுவலக சுவர்களுக்குள்
அடங்கிப் போனதாய் வாழ்க்கை !

காலநேரம் பாராமல்
கணினிகளுடன் நடத்திய போராட்டத்தில்
காணாமற்போன மனித சந்திப்புகள் !

அன்றாடம் பார்த்து சலித்துப் போன
அதே முகங்கள்;
அக்கம் பக்கத்து நாற்காலிகளில் !

மூளையின் கற்பனை ஊற்று வற்றி
காய்ந்து போனதாய் ஓர் உணர்வு !
புதிய தோண்டுதலில்தானே ஊற்று !
புதிய சந்திப்புகளில்தானே புது எண்ணங்கள் !!
புதிய எண்ணங்கள்தானே கற்பனை !!!

அவசர ஓட்டங்களில்
அவதானிக்கத் தவறிய
அழகின் சிரிப்புகள் !

சமுதாய நீரோட்டத்தில் கலக்காது
கிணற்றுத் தவளையாய் ஒரு நெடிய பயணம்;
கிணற்றுக்குள்ளேயே !

பணப்பை கனத்தும் கனம் குறையா
மனப்பைகள் !

புதிய முகங்களின் தேடலில் ஒரு முயற்சியாய்
புத்தனாய் கிளம்பிவிட்டேன் நகர்வலம்...

ஆ ! அத்தனையும் புதிய முகங்கள் !!
சிறியதும் பெரியதுமாய்
நெட்டையும் குட்டையுமாய்
எத்தனை கோடி உருவங்கள்
இறைவனின் படைப்பில் !

ஒவ்வொரு நடையிலும் ஒவ்வொரு வேகம்
வெவ்வேறு தேடலுடன் !
நீண்ட வரிசைகளில் நெடுநேர காத்திருப்பு
ஒருமித்த தேடலுடன் !

நெடுநாளுக்குப் பின்னான சந்திப்பில்
நெகிழ்ந்து போன நட்புகளின் குசலம்விசாரிப்புகள்
நீண்ட தழுவலுடன் !

ஆண்-பெண் இரட்டையர்களின் சல்லாப
அணிவகுப்புகள்; புதிய கைப்பைகளுடன் !

தாயின் கையைப் பற்றி இழுத்து
தவழ்ந்தோடும் மழலைகள் !
தனயனை சாலையின் மறுபக்கத்தில்
தவறவிட்ட தவிப்புடன் தாய் !

தனிமையின் இறுக்கத்தில் சில முகங்கள் !
தனியராய் தப்பிவிட்ட மகிழ்ச்சியில் பல !

இப்படி -
வருவதும் போவதுமான
வண்ண வண்ண மேகங்கள்
கண்களில் கருவாகி
மனதுக்குள் மழையை பெய்து
வேகமாய் விலகிச் செல்கின்றன;
ஈரம் சொட்டும் இதயத்தை தாங்கி
தளர்வாய் நடை கட்டுகின்றன என் கால்கள்;
மீண்டும் கணினிகளை நோக்கி.

(sunofsoil@gmail.com)
செப்டம்பர் 2006 இதழ் 81

## 80. ஒரு நுனிப் புல்லோடும் அதில் தூங்கும் பனியோடும் பேசு. -- கரவைதாசன்--

அன்பின் தம்பி
எவர்க்கும் போல் எனக்கும் கிடைத்தன்வே
காரணமாகின்றன.

முன் பின் அறியா இருட்டு
அறைக்குள் அடைக்கப்பட்ட பூனையாய் - நீ
உணருகின்றபோது
எனக்குள் ஈரமற்ற மழை.

வாழ்வு
மூழ்கிக் கரைவதற்கு மட்டுமல்ல.
மீண்டும்! மீண்டும்!
முளைத்து உயிர்ப்பதற்காய்.

ஒரு நுனிப் புல்லோடும்
அதில் தூங்கும் பனியோடும் பேசு.
எதையும் சந்தேகத்தோடு தேடு - படி
புரிந்து கொண்டே பேசு.

மதங்களுக்குள் மனங்களைத் தேடாதே!
மனங்களுக்குள் மதங்களைத் தேடு!
புரிந்து கொண்டே பேசு.

துகள்களைத் துடைத்; தெறிந்திட - என்னிடம்
ஒரு பொட்டுத் துணி இல்லை.
மண்ணைப் புரட்டிட - உன்னிடம்
கத்தி, கடப்பாரி, கலப்பை
எல்லாம் உண்டு.

எல்லாம் எல்லோர்க்குமானால்
எனக்கும் சந்தோசம்.

இறுதியாக
ஓர் வேண்டுகோள்!
எதிரியின் பாசறைக்குள்
என்னைத் தேடாதே!
ஓடுகின்ற நதியில்
காணுகின்ற நிலவு - நான்

நான் சிறகை விரிப்பது
பறப்பதற்கு மட்டுமல்ல
உன்னை அணைப்பதற்கும் தான்.

thasan@vejen-net.dk
செப்டம்பர் 2006 இதழ் 81 -

## 81. அவள் வருவாளா...? - வைகைச் செல்வி-

பூமியின் முனையில்
பிணைக்கப்பட்டவனாய்
நீண்ட நெடுங் கரையில்
கிடக்கிறேன்

துயிலட்டும் அவள்
ஆழ்கடலில்.
கடலின் அலைகள்
அவளுக்குத் தாலாட்டு.
விழித்திருக்கையில்
கரையின் இரைச்சலில்
நடமாட வருவாளோ?
நடுநடுங்கிப் போவாளோ?

உடலுக்குள் உருளும்
என் ஆன்மாவின் நேசம்
வெடித்துப் பரவி
கரையெலாம் சிதறும்

தொடுவானம்
சிவப்பைப் பூசுகையில்
பாய் மர விரிப்பில்
அசைந்தாடும் மூச்சு
என்றாவது ஓர் நாள்
கடலுக்குள் செல்லும்.

கடற்கரைக் குரல்கள் தேய
என்
உறவுக் கண்ணிகள்
தெறித்து விழுகையில்
கடற்கன்னி வருவாளோ
கன்னத்தில் முத்தமிட?

josephine_india@hotmail.com
செப்டம்பர் 2006 இதழ் 81 -

## 82. போதையும் கவிதையும்! - தேவஅபிரா -

நான் இன்று மது அருந்தினேன்.

நிறைந்த போதையில் கவிஞர்களுக்கும்
தள்ளாட மட்டுமே முடியுமென்பீர்களோ?

இவ்விரவில் நிறைவடைந்த
காதலும் காமமும் மட்டுமே
என் வார்த்தைகளுக்குள் சிக்காதவை.
வார்த்தைகளுக்குள்ளவை சிக்குவதும் இல்லை!

வாழ்வின் ஆழம் தெரியாவிடின்
கவிதையாகவது வடிவதில்லை.
கண்ணுக்குத் தெரியும் விம்பங்களைக்
கவிதை நம்புவதுமில்லை.
கடுகிச் செல்லும் உலகின் மொழி
கவிதைகளின்றி வரண்டு போகிறது...
உலகின் துயரத்தைப் பேசும் வார்த்தைகள்
கவனிப்பாரற்றுச் சிதறிக் கிடக்கின்றன...

சிதறாத எண்ணங்களுடன்
என் கையெழுத்தோ தள்ளாடுகிறது.
போதை காற்றானால்
நானுமென்னெழுத்தும் ஏனாடக்கூடாது?

எல்லாவற்றையும் விற்கவும் வாங்கவும்
கற்பிற்கும் உலகில்

எவரும் விற்கவோ வாங்கவோ முடியாதது
நான் போதையில் எழுதிய இக்கவிதை!
05-02-2006

## 83. போரின் விலை! - தேவஅபிரா -

USA
போரின் விலையைப் பற்றி 'நீ ' பேசுகிறாய்!
அமைதியிழந்த இத்தீவில்
நாங்கள் கேட்க வேண்டிய அக்கேள்வியையும்
நீயே கேட்கிறாய்.
நீயே பதிலும் சொல்கிறாய்.

அமைதிக்காக நீ எங்கும் நுளைக்கும் பாதைகளின்
வரைபடங்கள் பற்றியும் நாமறிவோம்
அமைதியை ஆக்குமுன் கருத்தியல் தெளிவாகவுள்ளது.

சாக மறுப்பின் கும்பிடு.
கும்பிட மறுப்பின் குறுகு.
குறுக மறுப்பின் குனி.
குனிய மறுப்பின் அடங்கு.
அடங்க மறுப்பின் சா.
அமைதி வரும்!
அடக்குபவர்க்குப் பால் கொடு
அடங்குபவர்க்கு பாய் கொடு
பாலைக் குடித்தவன்
முலையைக் கடிப்பான்
யோனியைத் தின்பான்
சாத்வீகச் சிலைகளின் கீழே சடலங்களும் விரிப்பான்.

போரின் விலையைப்பற்றி எங்களுக்கே விடுகிறாய் சரடு.

போர் மரணத்தின் வார்த்தை
மரணமோ விடுதலையின் வார்த்தையல்ல
அதையும் நாமறிவோம்.

'அமைதி ' உன்னால் எல்லா மொழிகளிலும் அழிந்தவார்த்தை!

அமைதி பொங்கி வெடிக்கிறது
அமைதி கொழுந்துவிட்டெரிகிறது.

ஆடி அடங்கிய ஆழியின் கரையில்
அமைதியின் விலையையும்
நாங்களே தீர்மானிப்போம்!
அதனை

'நீ '
பேசாதே!!!

11.01.2006
மார்ச் 2006 இதழ் 75 -

“US wants cost of return to war to be high”

“they will face a "stronger, more capable and more determined" Sri Lankan military”

“Now you may be asking, why is the American Ambassador using such blunt language at a gathering of the business elite? What has this got to do with our
businesses or our interests?" - US Ambassador to Sri Lanka and Maldives Jeffrey J. Lunstead

## 84. வாழ்வில்லாப் போர்! - தேவஅபிரா -

நினைவறிந்து
நெஞ்சம் கிளர்ந்து
தெரிந்த உலகமோவிது?

வாழ்வு புரிந்து
வலியையுணர்ந்து
யாரடைந்தார் ஞானம்?

புரிந்த போர்
புரியாப் போர்
களங்கொண்ட மௌனம்
கையாலாகாத அமைதி
கண்தெரியாச் சடுகுடுவாட்டம்
அதிகாரமும் ஆணவமும் பேசும் வார்த்தைகளின்
உள்ளார்த்தமும் வெளியர்த்தமும் யாரறிவர்?

கண்ணீரும் கம்பலையுமாகி
மண்ணள்ளித்திட்டி மார்பிலடித்து
ஓலமிட்டு ஒப்பாரிவைத்தும் ஆறாதரணங்களின் மீது
காலாதிகாலமாக இராசதந்திரமும் நடக்கிறது

கைதொழுதேற்றும் காலடிகள் நீளும்
கங்கை தின்ற சடையும்
காவி மூடிய தாது கோபுரமும்
கர்த்தரும் பாங்கொலியும் பகிரா விடைகள் மீது
பாவிகளின் கேள்விகள்...

காலத் தடத்திலும் உண்டே கையறு நிலை.

ஊழி கொண்ட ஆழியோ
உன்மத்தமான கோடையோ
அலையுமாயிரம் இலைகளில்
அழியுமிரவின் அமைதியோ
அன்பேயென்று என்னுள் உறங்கும் காதலோ
கூடவறியாத ஆயிரங்கணங்களின் கனத்தை
எப்பாயிரத்திலிறக்கி வைப்பேன்;
எப்போது வாழுவேன்?

indran05@yahoo.co.uk / thevaabira@gmail.com மார்ச் 2006 இதழ் 75 -

## ( 84.- 88)- அன்பாதவன் கவிதைகள்!

### 84. வாழ்வின் ருசி! - அன்பாதவன்

பட்டமரத் துலர்ந்த கிளையொன்றில்
வந்தமர்ந்த பறவையின் இசைத்தூவல்களில்
மெல்லத்துளிர்க்கிறது மரம்
காயம்பட்ட மனசுக்கு
மருந்திடும் உரையாடலில்
மறக்கிறது மனவலி
பரிவு நிறைந்த விரல்களின்
தீண்டலில் மறைகிறதென்
கண்ணிணிர்க்கோடுகள்
ஓசைகளே வாழ்வாகிக் கழியுமென்
பொழுதுகளில் ருசிக்கிறாய் சங்கீதமாய்
வறண்ட மனதில் மழைத்துளியாய்
வீழ்கிறதுன் புன்னகை
கவிழ்ந்த இருள் போர்த்தி
இருண்டிருக்கும் என்வானில்
ஒளி பொருத்துகிறாய்
நீ இசை நீ ஒளி நீ புதிர் நீபுன்னகை
உனக்கு நானும் எனக்கு நீயுமாக
ஊட்டிக்கொள்வோம்/வாழ்வின் ருசியை.

## 85. பெருநகரப்பிசாசு! - அன்பாதவன்

1.வேகமாய் ஊர்கின்றன மின்வரட்டைகள்
அட்ச தீர்க்க இரும்பு நரம்புகளில்
பெருநகரத்தை
இணைத்து
கூரையிலும் பயணித்து
குவிந்து நிறைந்திருக்கும் பெருங்கூட்டம்
பெருங்குவியலூடே நிற்கிறேன்
துணையற்றத் தனிமையை
விழுங்கி செரித்து.

2.பாதங்கள் அனுமதித்த இடைவெளியில்
செருகிக்கொள்வேன்
கைப்பிடியிலும் தொங்கி வருவேன்
மூச்சிருக்கும் துணிக்கடை பொம்மையாய்

ஏற்றி இறக்கித் தள்ளும்
இயந்திரக் கூட்டம்
கண்மூடிப் பயணிணிணித்து திறக்க
கோப்புகளுடன் வரவேற்கும் அலுவலகம்

3.மாநகரச் சதைக்கோளத்தாக்குதலில்
பயனற்று வழியும்
சக்தி

4.கால்களில் சிறகு முளைத்தவனுக்கு
கூடடையும்போது
வரமறுக்கும்
தூக்கம்
உளைச்சலைத்தணிணிக்க உதவும்
உறக்க வில்லைகள்

5.ஒரு ராட்சச மிருகத்தைப்போல
விழுங்க யத்தனிக்கும்
பெருநகரப்பிடியிலிருந்து தப்பிக்க
லாகிரி

நுகர்ந்து
சுய மைதுன த்துணையுடன் தூங்கி
விழித்து வாசல் திறக்க

## 86. மூன்று கவிதைகள்! - அன்பாதவன்

# 1
பால்வீதியின் பரந்த வெளியில் மிதந்து
நட்சத்திரங்களின் இடைவெளியில் புகுந்து
திசைகளின் ஒளி படாத பிரதேசங்களுக்கெல்லாம்
பிரவேசிக்க கனாக்கண்ட பறவையொன்று அமர்ந்திருக்கிறது
சிறகுகள் வெட்டியெறியப்பட்டு
காறி உமிழ்ந்தேன்
கால்களைப் பிணைத்த கனத்த சங்கிலியின் மேல்
நிசப்தப் பட்சியின் நெற்றியில் முத்தமிட்டு.

# 2
ஞாபகங்கொள்ளவியலா மாநகரின் சராசரிகளுக்குள்
வித்யாசமானதாய் அழைத்ததொரு
கருத்த மிருகம்

அகண்ட மார்பும் வலிய புஜங்களும்
மிருக பலம் சொல்பவை
கண்களுக்குள் கனவுகள் பலதயும் அடைகாத்ததின்
உரையாடல்களில் ததும்பும் நகைச்சுவை

'இயல்பே இதுதானோ...?'
"எனக்குமுண்டு எனக்கேயெனக்கான தனிச்சோகங்கள்"
-கம்மியக்குரலில் மெல்லியப் புன்னகை மிளிர

காலாற நடக்கவிரும்பிய
வலிய மிருகம் கட்டப்பட்டிருந்தது
பல்வேறு முளையடித்த கயிறுகளில் நகரவுமியலாமல்
நம்பிக்கையோடு உரையாடுகிறது மிருகம்
கண்களில் கனவுகள் மின்ன.

# 3
தனித்திருந்தவன் உடலைப்
பிணைத்திருக்கிறது நாகமொன்று

தீண்டத் தீண்ட பரவுகிறது
இன்பவிஷம்

ஒவ்வொருக் கொத்தலும் வெவ்வேறு வகையாக

குருதி வெளியேற்றி
குடியேறியது ஆலகாலம்

அயர்ச்சியாய் இருக்கிறது மீண்டுத் திரும்புதல்
என சலித்த நாகத்தை
அணியாய் தரித்தேன் சிவனாய்

### 87. கொக்கு! - அன்பாதவன்

இரவின் மடியில் தலைவைத்து படுத்திருந்தவனை
தொட்டெழுப்பியது மாயக்கரமொன்று

வளைக்கரத்தின் ஸ்பரிச இசையில்
தனை மறந்தவன் சுக மயக்கத்தில்

நகத்தீண்டலில் சிலிர்க்குமுடலை கரமேந்தித்
தழுவுகையில் கலக்கிறது உயிர்க்கலவை

மூச்சனலில் உருகி வழியும் காமம்
வியர்வை நதியாய்

பேசுகிறோம்;பிதற்றுகிறோம்;பித்தமென உளறுகிறோம்
அர்த்தங்களை தொலைத்த வார்த்தைகளைத் தேடிச் செதுக்கி
சிற்பமாக்கும் முயற்சி;அரூபச்சிற்பம்

ஏதோ ஒரு சுழலுக்குள்
இழுத்துப்போகிறது உருவமற்றக்குரல்

நீந்தி விளையாடலில் நேரம் போவதறியாமல்
சேவல் கூவத் திடுக்கிட்டு விலகி நாணம் குழைய
தழுவுகிறாள் காற்றாய்
அணைத்தக்களைப்பில் ஆனந்த அயர்ச்சி

கூடலை முடித்த திருப்தியில்
களைத்துறங்கிய நிர்வாண உடலெங்கும்
முத்தமுத்திரைகள்

வெளிச்ச விடியலில் கலைந்த தாள்களெங்கும்
ஈரம் அழித்த கவிதைகள்

தவமிருக்கிறோம் மற்றுமொரு இரவுக்கு
புதியக் கவிதைகளுக்காய்.

காத்திருக்கிறேன்!

விடுமுறையில் வரும்போதெல்லாம்
கலைத்துப்போட்டுவிடுகிறாய் வலியக் காற்றைப்போல

மூழ்கடித்து விடுகிறாய்
சந்தோஷப்-பெருமழையில்
மூச்சுத்திணறிப்போகிறது ஆனந்தத்தில்

தாழ்வாரம் படுக்கையறை முற்றம்
குளியலறை சமையலறையென
எங்கும் இரைந்து கிடக்கிறதுன்
ஞாபகங்கள்

எது எப்போதெனத் தெரியா ரகஸ்யமே
உனதுசுவா'ரஸ்யம்
கொஞ்சம்-கொஞ்சமா'ய் முயற்சித்து
ஒழுங்குக்கு மீண்டு வரும்போது
தலைக்காட்டுகிறதுன் அடுத்த விடுமுறை

2.

## 88. மீறல்சுகம்! - அன்பாதவன்

மின்தடை நேரங்களில் கம்பிவேலி தாண்டி குதித்தோடுகிறேன் என் ப்ரியத் தாவரம் நோ'க்கி
காவலனை ஏமாற்றி காத்திருக்கும் எதிர்பா'ர்த்து
மின்சாரமோ காவலனோ வந்துவிட்டால் உயிர்ப் போ'கும்
மீறல்களில்தானிருக்கு மிகுசுகம்

jpashivammumbai@rediff.com
பதிவுகள், நவம்பர் 2005 இதழ் 71

## 89. இருப்பிடம்! - கவிஞர் புகாரி

கடல் கண்டுகொள்ளாத
அலை நான்
மேகத்தில் ஏறிக்கொண்டேன்

மேகம் மறுதலித்த
மழைத்துளி நான்
நிலத்தின் மடி வீழ்ந்தேன்

நிலம் நிராகரித்த
நீர் நான்
காற்றில் தொற்றிக்கொண்டேன்

வீசும் காற்றுடன்
இங்கும் அங்குமாய்
அலைந்தேன் திரிந்தேன்

காட்டு மரம் ஒன்றில்
கருங்கல் பாறை ஒன்றில்
மூங்கில் கிளைகளில்
பேய் உறங்கும்
பழைய மாளிகைச் சுவற்றில்

கொடிக்கம்பு நுனியில்
பாய் மரத்தின் விளிம்பில்
வேப்பமர இலையில்
குஞ்சுகள் வெளியேறிய
அனாதைக் கூட்டில்

துருவேறிய கம்பிகளில்
கொம்பில் விழுந்த
பறவையின் எச்சத்தில்
ஒட்டிக்கிடக்கின்றன
என் இரத்தத் திசுக்கள்

buhari@gmail.com
நவம்பர் 2005 இதழ் 71

### 90. கனாக் கண்டேன்! - கவிஞர் புகாரி -

அமுத நீர் சுரக்கும் இதயக் கிணற்றில்
ஊமைக் காயங்களாய் மூடிக் கிடக்கும்
அவளின் ஆசை ஊற்றுக்கண்கள்
அத்தனையையும்
அந்தரங்க விரல்கள் நீட்டி
மெல்ல மெல்ல உடைத்தான்
அவன்

வெள்ளம் வெள்ளம்
எப்போதும் இல்லாத அளவில்
விழி மனம் உயிர் ஆன்மா
அனைத்தையும் நனைத்துத் துவைத்து
பொங்கிப் பெருகி
அவளுள் ஒரு வெள்ளத் திருவிழா

குருதிச் சித்திரங்கள் தீட்டி
துடித்து வெடித்து விளைந்த
அவனின் கந்தகக் காயங்களிலெல்லாம்
மெல்லிய மன இழைகளால்
பொழுதுகள் தப்பாமல்
நேச உயிர் ஒத்தடங்கள்
கொடுத்தாள் அவள்

கண்ணீர் கண்ணீர்
இமைகளைக் கரைத்தழித்துக்கொண்டு
கருணை பெற்ற நெகிழ்ச்சியில்
கனிந்து குழைந்த அவனின் கண்களில்
காட்டாற்றுக் கண்ணீர்ப் பெருவிழா

ஆம்...

வாடி வதங்கி
உயிர்மட்டும் மீதம் வைத்து
வான் நோக்கிக்கிடந்த
காய்ந்த பழைய செடியில்
பூத்தது ஒரு சந்தனமுல்லை

காலப் பெருமரத்தில்
முட்டி மோதி அடிபட்டு

குற்றுயிராய்க் கிடந்த
ஒரு வண்ணத்துப் பூச்சி
திடுதிப்பெனத் தேடிவந்த
பொன் வசந்தத்தில்
மூச்சுப் பற்றி உயிர்த்தது

தன்னையே பதித்துப் பூத்த
சந்தன முல்லையின் இதயவனத்தில்
ஓர் ஈர முத்தமாய்ச் சென்றமர
கருகிக் கிடந்த சிறகுகளை
புத்துறவுக் காற்றில் புதுப்பித்துக்கொண்டு
சிறகடித்துச் சிறகடித்துச் சிலிர்த்தது
வாஞ்சைமிகு வண்ணத்துப் பூச்சி

வண்ணத்துப் பூச்சே வண்ணத்துப் பூச்சே
அங்கேயே நில் என் வண்ணத்துப் பூச்சே
அருகிலொருபோதும் வாராய்
என் உள்ளங்கவர் வண்ணத்துப் பூச்சே

என்னைப் பறித்தெடுத்துத்
தன் போலிக் கருங்கூந்தல் சூடி
விருந்துக்குச்செல்ல விரைந்து வருகிறாள்
அதோ... அதோ.... என் எஜமானி

நான் அவள் தோட்டத்து மலரல்லவா
நாமோ நியதிகளின் தவறல்லவா என்று
முகம் மூடி விசித்தது சந்தன முல்லை

தொடரும் இவைபோன்ற
பிரபஞ்சக் காட்சிகளில்
இயற்கைத் தளிர்களையெல்லாம்
துண்டுதுண்டாய் நறுக்கிப்போட்டு
எத்தனை எத்தனையோ
கூட்டுக்கறி சமையல்கள்

நிரம்பி வழியும் ஏக்கங்களில்
பெருகி உயரும் துயரங்களில்
சுற்றிச்சுழலும் பெருமூச்சுப் புயல்களில்
பிரபஞ்சம் நிச்சயம் அழிந்துபோகும் என்று
பிரபஞ்சமே கதறுவதுபோல்
கனாக் கண்டேன்

## 91. உயிரினினும் இந்தப் பெண்மை இனிதோ? - வைகைச் செல்வி -

என் தாயே!
நீ மாதவம் செய்திருக்கத் தேவையில்லை.
அங்கே மாமரத்தின் கீழே
என் வயதுப் பையன்கள்
நட்சத்திரங்களுடன் பேசுகையில்
இங்கே நானோ,
சிம்னி வெளிச்சத்தில்
அரிசியிலே கல் பொறுக்குகிறேன்
உலை காய்ந்து கொண்டிருக்கிறது.
அந்தக் கூட்டத்தில்,
என் பிரிய நண்பன் இருக்கிறான்.
பகற் பொழுதினிலேயே
அவனுடன் நான் அமர இயலவில்லையே?
இவ்விரவில்...?
அவன் ஒரு ஆண்
நான் ஒரு பெண்ணாம்.
என் மனத்தின் ஆண்மை யாருக்குப் புரியும்?
நேற்று ஒருவன் பாரதியைக் காதலித்தான்
இன்று நான் காதலிக்கிறேன்.
அவனுக்குப் பெயா பாரதிதாசன்.
தாசனுக்குப் பெண்பால் எனில்
தமிழே என்பால் கல்லெறியும்.
ஆதாமுக்குப் பிறகு ஆண்சாதியும் இல்லை.
ஏவாளுக்குப் பிறகு பெண்சாதியும் இல்லை.
இது இங்கே
யாருக்குப் புரியும்?

vaigai_anne@yahoo.com
மே 2005 இதழ் 65

## 92. உள்ளே ஒரு வானவில்! - வைகைச் செல்வி-

தாழ் திறக்கும் என்றால்தான்
காத்திருத்தல் சுகம்.
இல்லையெனில்
மரண அவஸ்தை

கால மயக்கத்தில்
கண் விழித்துப் பார்க்கையில்
பகலா
இரவா
ஏதும் புரியவில்லை.

பகலுமின்றி
இரவுமின்றி
அந்திப் பொழுதாய் இருந்தாலும்
சில்லென்ற குளிர்காற்றும்
சிங்காரப் பூமணமும்
உன் முத்தம் தந்திடுமோ?

பகலென்று தெரிந்தால்
சிறகுகளை விரிக்கலாம்.
இரவென்று தெரிந்தால்
கூட்டிற்குள் ஒடுங்கலாம்.

தாழ் திறக்காவிட்டாலும்
இந்த மரண அவஸ்தை
அந்திப் பொழுதின் வானவில்.

vaigai_anne@yahoo.com
மார்ச் 2005 இதழ் 63 -

## 93. என் முனியம்மா.. - புதியமாதவி (மும்பை) -

பாரதிக்கு
கண்ணன் என் சேவகன் மாதிரி
எனக்கு எங்கள் முனியம்மா.

காய்கறி நறுக்குவது முதல்
துணிமடிப்பது வரை
எல்லாம் அவள் செய்வதாகத்தான் ஒப்பந்தம்
ஆனால் ஒப்பந்தங்களை மீறுவதில்
நாங்கள் இருவருமே
இந்தியாவும் இலங்கையும் மாதிரி.

ஆனால் எங்கள் ஒப்பந்தங்களில்
எழுதப்படாத ஷரத்துகள்
எங்கள் இருவருக்குமே
ரொம்பவும் முக்கியமானவை
அதைத் தொடர்வதால்தான்
என்றும் தொடர்கிறது
எங்கள் இருவருக்குமான
கைகுலுக்கல்கள்.

எல்லார் வீட்டு செய்திகளையும்
அவள் சொல்லச்சொல்ல
நான் விருப்பத்துடன் கேட்பது போல
ம்ம் கொட்ட வேண்டும்.
பதிலுக்கு நான் சொல்லும்
இலக்கிய அரசியல் கதைகளை
அவளுக்குப் புரியாவிட்டாலும்
அவள் கேட்டாக வேண்டும்.

இப்போதெல்லாம் நம் தமிழர்
எழுச்சிக்கதைகளை
முத்துக்குமரன்களின்
உயிர்த்தியாகங்களை
ஈழத்தமிழருக்காய்
நடக்கும் கூட்டங்களை
பேரணிகளை
மனிதச்சங்கிலிகளை
நித்தமும் நித்தமும்
நம் தலைவர்கள் பேசிய

வீரவசனங்களை
சொல்லிச்சொல்லி
பூரித்துப்போனேன்.
தேர்தல் வந்தது
கூட்டணி பிறந்தது.

முனியம்மா கேட்கிறாள்
என்னமா இது..?
யாரு கூட யாரெல்லாம்?
ஈழத்தமிழர் போராட்டம்
அது இதுனு சொன்னீகளே
இவுக மாறிமாறி
அங்கேயும் இங்கேயுமா
நிக்கத பாத்தா
ஏ தாயி...
அண்ணன் தம்பி செத்தாலும் பரவால்லேனு..
இந்த ஆட்டம் ஆடுதானுகளே..
இவனெல்லாம்
சோத்துலே உப்பு போட்டு தின்னான
இல்ல..

முனியம்மா அடுக்கிக்கொண்டே
இருக்கிறாள்
நான் மவுனமாய்...
வழக்கம் போல
ம்ம்ம் கொட்டிக்கொண்டு.

## 94. நகம் - புதியமாதவி (மும்பை) -

விதம் விதமாக
வண்ணம் பூசி
அழகுப்பார்த்த காரணத்தாலேயே
வெட்டாமல் இருக்க வேண்டும்
என்பதல்ல.
கவனமாக வெட்ட வேண்டும்.
ஆழமாக வெட்டினால்
ரத்தக்கசிவு வரலாம்
கவனிக்காமல் விட்டுவிட்டால்
வீங்கி சீழ்ப்பிடித்து
விண் விண் என்று
வலி கொடுக்கும்
பிராண அவஸ்தையை
அனுபவிக்க வேண்டிவரும்.

வளர்ப்பது தற்காப்புக்கு
என்றெல்லாம் சொல்லிக்கொள்ளலாம்
வளர்ந்து வளைந்திருக்கும்
இடுக்குகளில்
தங்கிவிடுகிறது
தேடிவந்த அழுக்கும்
தேகத்தின் அழுக்கும்.
சமைப்பது சாப்பிடுவது
அழுக்குகள் சேர்த்துதான்
என்றாலும்
பழகிவிட்டது
இரப்பையும்
இறைப்பையும்.

இரவில் வெட்டினால்
தரித்திரம் என்று
பாட்டி சொன்னதையே
அம்மாவும் மறக்காமல்
சொல்கிறாள்.

வெட்ட வெட்ட வளருமாம்
உன் நினைவுகளைப் போலவே
நகமும் .
செத்த உடம்பிலும்

நகம் வளருமாமே
சொல்லுகிறார்கள்
உண்மையா?
அதனால்தான் உயில் எழுதுகிறேன்
விரல்களைப் புதைக்காதீர்கள்
எரித்துவிடுங்கள் என்று.

puthiyamaadhavi@hotmail.com
மே 2009 இதழ் 113 -

## ( 95.- 100) நல்லதோர் வீணை செய்தே... - ப.மதியழகன் (திருவாரூர்)

.கவிதைகளால் கட்டிய கல்லறை
கல்லறைச் சமீபமாய்
ஓயாது ஒலித்துக் கொண்டிருக்கும்
அவன் குரல்
வீட்டில் அவனுடைய சிறு அறையில்
எண்ணற்ற வெள்ளைக் காகிதங்கள்
அவன் கவிதைகளை எழுதியவுடன்
கனக்கக் கண்டிருக்கிறேன்
கல்லூரிக் காலங்களில்
அடைந்துவிட்ட சுதந்திரத்தைப் பற்றி
ஆர்ப்பரிக்கப் பேசுவான்
பாரதி கண்ட சுதந்திரம்
இதுவல்லவென்று
காதலியிடம் ஸ்நேகமிருந்தால்
சிறுநகத் தீண்டல் கூட
பேரின்பம் என்பான்
முக்தி பெற்று
கோவில்களில் சிலைகளாயிருக்கும்
தெய்வத்தில் ஒன்று
என்முன் வந்து வாழ்கிறது
அதுவே என் அம்மா என்பான்
விடியலிலிருந்து
தபால் நிலைய வரிசையில் நின்று
விண்ணபபம் வாங்கி வருவான்
வேலைதேடும் நண்பனுக்காக
காதல் யுத்தத்தில்
அபிமன்யூவாக நான்
கௌரவராக நீ - என்ற
அவன் கவிதை மெய்யாகிப் போனது
பத்ம வியூகத்தில் சிக்கி
உயிரிழந்தான்
இன்னும் அவனுடைய இதயம்
கல்லறையில் உறங்காமல்
துடித்துக் கொண்டேயிருக்கிறது
காதலித்த நாட்களில்
அவன் எழுதிய காதல் வேதங்கள்
இன்று கடற்கரை மணலில்
சுண்டலைச் சுமந்து கொண்டிருக்கிறது.

## 96. புயலுக்கு பிந்தைய இரவு - ப.மதியழகன் (திருவாரூர்)

பெண் பெயரை வைத்ததாலோ
என்னவோ
இவ்வுளவு காலமாய்
தன் உள்ளத்துக்குள்ளே வைத்துக்
குமுறிக்கொண்டிருந்த
அடக்குமுறைகளும், அவமானங்களும்
எண்ணச் சுழற்சியாக உருக்கொண்டு
கடலின் நடுவே மையம் கொண்டு
சூறாவளியாய் சுழன்றடித்து
உலகை மிரளவைத்துக்
கரை கடந்தது
பிரதேசமெங்கும்
விசும்பல்கள், முனகல்கள், அழுகைகள்...

வீடிழந்தவர்கள்,
பிள்ளைகளை பறிகொடுத்தவர்கள்,
உறவுகளை தொலைத்தவர்கள்...
-இவர்களனைவரும் தற்காலிகமாக
தங்க வைக்கப்பட்டுள்ள
பள்ளிகளில்
தாய்மையின் கண்ணீர்ப் புலம்பல்கள்
காற்றலைகளில் பரவிக்கிடக்கிறது
புயலுக்குப் பிந்தைய இரவுகளில்...

பேரழிவைத் தடுத்திட வேண்டுமென்ற
உள்ளக்கிடக்கையைவிட
வேறு ஏதும் செய்ய ஏலாத
கடலன்னை வடித்த
கண்ணீர்த்துளிகள் கடலுடன்
கலந்து நுரைக்கிறது.

## 97. பாட்டுக்கு ஒரு தலைவன் - ப.மதியழகன் (திருவாரூர்)

சமுதாய நிகழ்வுகளை உள்வாங்கி
கவிதையாய்ப் புனையும்
இவனது கற்பனைத் திறனே
இவனுடைய சொத்து
பத்திரத்தில் பதிய முடியுமா
பலர் மத்தியில் பெருமிதம்
கொள்ள முடியுமா
இவன் இதை வைத்து
உறவுகளின் உதாசீனப்படுத்தலையும்
நண்பர்களின் நையாண்டியையும்
மனைவியின் அன்றாட
ஏச்சுப் பேச்சுக்களையும்
ஒவ்வொரு நாளும் எதிர்கொண்டு
கண்ணுறக்கம் கூட முள்படுக்கைதனில் என்ற
இக்கட்டு தொண்டைக்குழியில் உயிர்நோக
இறுக்கிய சூழ்நிலையில்
சுழன்று சுழன்று வீசும்
சூறாவளியிலிருந்து
இவனது உள்ளுக்குள் எரியும்
படைப்புக்கு பிரகிருதியான சுடரை
அணையாமல்
ஜீவன் பிரியும் வரை
தமிழ்ப்பிரவாகம் குறையாமல்
காப்பாற்றி வந்தான்
தன்னை தமிழுக்கு அர்பணித்து
மகாகவிஞன் மறைவுக்குப்பின்
கல்லறையில் ஏற்றிவைத்த அகல் விளக்கு
காற்றினால் அணைந்த பின்புதான்
இவனுடைய கவிச்சுடர் விளக்கு
இலக்கியவானில்
விடிவெள்ளியாய் ஒளிவீசத்துவங்கியது
காலவெள்ளம் கவிஞனை
அடித்துச் சென்றுவிட்டபோதிலும்
அவனது கவிவெள்ளத்தில்
சிக்காமல் மீண்டவர் யார்
இங்கு!

## 98. மனப்பதிவுகள் - ப.மதியழகன் (திருவாரூர்)

என்னைக் கடந்து சென்றுவிட்ட தென்றல்
இப்பொழுது யாரைத் தாலாட்டிக் கொண்டிருக்கிறதோ...
நதியில் நேற்று பார்த்த நீரலைகள்,
இக்கணத்தில் பலமைல் பயணப்பட்டிருக்கும்
ஆனால், இன்று கண்ட நீரலைகளிலும்
என் முகம் தெரிந்தது.
குலை, குலையாய் பனங்காய்கள் உள்ள
பனை மரதசை விட, அவற்றுக்கிடையே நிற்கும்
மொட்டைப் பனைமரமே
கண்களின் கவனத்தை ஈர்க்கின்றது.
வெகு உயரத்தை அடைந்துவிட்டால்
செயலற்று சும்மா இருக்கலாம்
என்பதை ஆகாயத்தில் மிதக்கும்
கழுகு உணர்த்தியது.
இப்பூமியிலுள்ள ஒவ்வொரு பொருளும்
சமீபத்தில் நம்மை விட்டு
மறைந்து போனவர்களின்
ஞாபகச்சுவடுகளை
மனஅடுக்குகளிலிருந்து தட்டி எழுப்புகின்றனவாய்
அமைந்திருக்கின்றன.
சூரியனுக்கு கீழே ஆயிரமாயிரம் மாற்றங்கள்,
வளர்ச்சிகள், கொண்டாட்டங்கள், பேரழிவுகள்,
அதிசயங்கள், ஆடம்பரங்கள்
ஆனால் கதிரவன் எவற்றையும்
பொருட்படுத்துவதில்லை
அப்படி இருப்பதால் தானே அவன் ஆதவன்.

## 99. உள்வெளிப்பயணங்கள் - ப.மதியழகன் (திருவாரூர்)

வான்வெளியில் மேகங்களின்
அணிவகுப்பைப் போன்றது
மனதில் நினைவலைகள்
உற்றுப் பார்த்தால்
வெவ்வேறு உருவங்கள் புலப்படலாம்
அம்முகில் கூட்டங்களில்

கடிவாளமில்லாத புரவியென
ஐம்புலன்கள், திசைக்கொன்றாய்
மானிடனை இழுத்துச் சென்று
சகதியில் அவனை விழவைத்து
சுற்றத்தார் கைகொட்டிச் சிரிப்பதை
சுற்றி நின்று வேடிக்கைப் பார்க்கும்
மனப்பரப்பில் எரியும்
ஆசையெனும் வேள்வித்தீயில்
ஆகுதியாகும்
விட்டில் பூச்சியைப் போல்
மனித உடல்கள்

காலைக் கதிரொளி
பனிப்போர்வையை விலக்கியது
பறவைகள் 'கீச்'சென்று சத்தமிட்டு
சிறகடித்துப் பறந்தன
மாலையில வாடிப்போய்விடுமோமென்று
வருத்தம் கொள்ளாமல்
மலர்கள் மலர்ந்து நின்றன
தென்றலின் பாடலை
மரங்கள் தலையசைத்து
ரசித்தன
தான் கரையில் ஒதுக்கிய கிளிஞ்சல்களை
வந்து பொறுக்கும் அரும்புகளைக் காண
கடலலை காத்திருந்தது
வைகறை மௌனத்தில் கீதம் பாட
தேவக்குயில் ஓடோடி வந்துவிட்டது
கருமேகத்தில் குமரக்கடவுளைக் கண்டது போல
தோகை விரித்தாடியது மயில்
வண்டுகள் அன்றுதான் முதல்முறையாக
தேனை சுவைத்தது போன்று
ரீங்காரமிட்டன

புல்லிதழ்களின் மீது படிந்திருக்கும்
பனித்துளி பிரியாவிடை பெற்றுச்சென்றது

இன்றைய பொழுது
நமக்கு இறைவன் அளித்தது
இயற்கை அதனை நன்குணர்ந்துள்ளது
மனித மனம் ஆதியிலிருந்தே அதனை
மறந்து வந்துள்ளது.

## 100. தொலைந்து போன நிழலைத் தேடி... - ப.மதியழகன் (திருவாரூர்)

பால்யத்திலிருந்து
எனைத் தொடர்ந்து வந்த நிழல்
இன்று தொலைந்து போய்விட்டது!

எனது பாதத்தடங்கள்
கடந்துவந்த பாதையை உளவறிந்து
எங்கு போய்ச் சொன்னதோ?

உணவின்றி, நீரின்றி, காற்றின்றி கூட
ஒருவன் இப்புவியில் வசிக்கலாம்
நிழலின்றி இருக்கமுடியுமா?

மற்றவர்களின்
நிழல்களைப் பார்க்க நேரும்போதெல்லாம்
விசாரிக்கிறேன்
எனது நிழலின் நலத்தைப் பற்றி!

mathi2134@gmail.com

## 101. விடியல் - ராம்ப்ரசாத்

இருளடைத்திருந்த வீட்டில்
மெல்ல ஒளி
குடிபுகத்தொடங்குவதுதான்
விடியலோ...

விடியல்கள் தோறும்
சன்னல் வழியே
வழுக்கி விழுகிறது
வெய்யில்...

அதனைத்
தாங்கிப் பிடிக்க
முயற்சிக்கையில்
என் கைகளில் நிறைந்து
தளும்பி விழுகிறது
வெய்யில்...

கண்ணாமூச்சி விளையாட்டை
இன்றும் மறந்திடாத
விடியல் இப்போதுதான்
தேடத்துவங்கியிருக்கிறது
இரவை...

ஆனால்,
விடியல்களின் வீட்டில்
இருள் தங்குவதே இல்லை
என்பது விடியலுக்குத்
தெரியுமா?

மார்ச் 2010 இதழ் 123